


# ரெக்ஸ்

# தரம் ஊரறிந்த உன்னதம்!

## இப்போது மற்றும் ஒரு கவர்ச்சி-அதன் விலை நயம்

எங்கள் ஸ்க்வாஷ்கள் மிகமிக நேர்த்தியான பழங்களாகப் பார்த்துப் பறித்து அவற்றிலிருந்து தயாரிக்கப் பட்டவை. பிறகு தூய சீனிப்பாகும் விசேஷமான இதர சரக்குகளும் சேர்க்கப் பட்டவை. எனவே சுவைத்தறியாத புத்துணர்ச்சி தரும் பானமாக உங்களை அடைகிறது —ரெக்ஸ்.






கார்ன் பராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், பம்பாய்-1.

Bensons/1911/TM

# உலகத்து நிலையங்கள் அனைத்தையும்

## தெளிவாக இணைப்பதில் என்றுமறியாத சிறப்பு...





மாடல் டிஏ/டியு 0284
ரூ. 303/- எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது.
விற்பனை வரி தனி.

## மர்பி —இன்டர்நேஷனல்

அதன் இன்பமயமான ஒலியை உங்கள் அருகாமையிலுள்ள மர்பி வியாபாரியிடம் கேட்டு பரவசமடையுங்கள்.

மர்பி இப்பொழுது அறிமுகப்படுத்துகிறது "இன்டர்நேஷனல்"—உங்கள் இல்லத்திற்கு உகந்த ரேடியோ. • நேர்த்தியான மரக்கேபினெட்டிற்கு எடுப்பான கருமை நிறமுகப்பு மற்றும் அதை அலங்கரிக்கும் கவர்ச்சியான பொன்னெழுத்துக்கள். • தூரமோ, அருகிலோ நீங்கள் விரும்பும் நிலையங்களை எளிதில் இணைக்க 3 பாண்டுகள். • உட்பொருத்தப்பட்ட ஒப்பற்ற ஃபெரைட் அன்டென்னா மிகவும் பலவீனமான நிலையங்களையும் எடுக்கும். • இன்டர்மீடியட் ஃப்ரீக்வென்ஸி ஸ்டேஜ் தெளிவான ஒலிக்கு உத்தரவாதம் அளிக்கிறது.

**மர்பி – இல்லத்தை மகிழ்விக்கிறது!**





# பலப்பல கோடைக் காலங்களில் உழைக்க போறி இயல் நிபுணத்துவம்!

**ஓரியண்ட்**

ஸீலிங் விசிறி

இரண்டு ஆண்டுகள் உத்தரவாதம்

**ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.,**

கல்கத்தா-54

ASP/JOGI-2/64

புதியது!

மொரமொரப்பான,
சுவையான உப்பு பிஸ்கட்

பிரிட்டானியா

# சக்ரா

**ஒன்றுக்கு பின் ஒன்று
மேலும் ஒன்று. மறுபடி.
மற்றொன்று**

முழுசாகக் கடித்துச் சுவைக்க உப்பு பிஸ்கட்தான் என்ன அருமை! வாய் கொள்ளும் அளவுக்கும் மேலே சுவைக்கத் தூண்டும் பிரிட்டானியா சக்ரா பிஸ்கட்டுகள். மிகவும் இலேசானவை. வாயிலிட்டவுன் கரையக் கூடியவை. மொரமொரப்பானவை. சுவையானவை. கை நிறைய, தட்டு நிறைய சுவைத்தாலும் திகட்டாது.



*பிரிட்டானியா என்றாலே உயர்தரம்.*

# கல்கி



## பொருளடக்கம்

சௌமிய, ஆனி 1 • ஜூன் 15



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

அட்டைப்படம்: ஆர். பி. எஸ். மணி


சமயச் சார்பின்மை
சமயம்
PK

சர்க்கார் தொழில் நஷ்டங்கள்
வரி கொடுக்கும் மக்கள்
பாதுகாப்புச் செலவு
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 28 ● இதழ் 46

# வேதனை தரும் நிலவரம்

தேசத்தின் இன்றைய நிலைமையைக் குறித்து வேதனைப்படாமலிருக்க முடியாது. மகாத்மா காந்தியின் நூற்றுண்டு விழா வருஷத்தில் அவரது அடிப்படைக் கோட்பாடுகள் அனைத்தும் மதிப்பிழந்து விட்டனவே என்ற வருத்தம் மேலோங்குகிறது. ஸத்தியம், அஹிம்சை சேவா உணர்ச்சி ஆகிய மூன்றும் வேகமாக மங்கி மறைந்து வருகின்றன. எதைச் செய்தாகிலும் பொருளீட்ட வேண்டும் என்ற உணர்வு மேலோங்கி நிற்கையில் உண்மை மதிப்பிழப்பது இயல்பு. ஆனல் இதன் விளைவுகள் பயங்கரமாகத்தான் இருக்கும். காந்திஜி தமது ஆயுட்காலம் நெடுக வாழ்ந்து காட்டிய சேவா உணர்ச்சி இன்று எங்கும் மருந்துக்குக்கூடக் காணேம். இமயம் முதல் குமரி வரை, மகாராஷ்டிரத்திலிருந்து அஸ்ஸாம் வரை தேசத்தை வன்முறைச் செயல்கள் பிடித்து உலுக்குகின்றன. இந்த மூன்று சீர்கேடுகளும் அகலக்கூடிய வகையில் காந்தி நூற்றுண்டு விழாக் கமிட்டியினரும், அவர்களுடன் இணைந்து பணியாற்றுகிற பிறரும் உழைக்க முற்பட்டாலன்றி மகாத்மாவின் ஆத்மா சாந்தியடையாது.

பதவிகளில் இருப்போரிடையேயும், அவற்றை அண்மையில் இழந்து ஆயாசப் படுவோரிடையேயும் போட்டா போட்டி, பொறுமை, ஆசாபங்கம் முதலியன மிகுதியாகக் காணப்படுகின்றன. ஏச்சும் பேச்சும் வலுக்கின்ற சூழ்நிலையில் உண்மைக்கு இடமேது? ஆதிக்கப் போட்டியின் தன்மை அப்பேர்ப்பட்டது. இதற்கு முக்கிய உதாரணம் தெலிங்கானு விவகாரம். சத்தியமும் சேவா உணர்வும் பின்னடைந்து ஆதிக்கப் போட்டி வலுத்த சூழ்நிலையில் ஏமாற்றமடைந்தவர்கள் மக்களை உணர்ச்சி வசப்படுத்தி, ரகளைகளையும் கலகங்களையும் தோற்றுவிப்பது சுலபமாயிற்று. இப்போதைய வன்செயல்கள் அனைத்துக்கும் பொதுவாயுள்ள அம்சம், எடுத்த எடுப்பிலேயே அரசினர் உடைமைகளைப் பாழ்படுத்துவது. இந்த வெறி தலைக்கேறியவர்கள் பிறகு இதைத்தான் செய்வார்கள், இதைச் செய்ய மாட்டார்கள் என்ற வரம்பு அற்றுப் போகிறது. சட்டம், அமைதியைப் பற்றிய விவகாரம் என்று மதித்து அரசினர் நடவடிக்கை எடுக்கிருர்கள். எடுத்த எடுப்பில் அடக்காத கலகம் வேகமாக வளருகிறது. போலீஸ் நடவடிக்கைகளை அடக்குமுறை என்று சித்திரித்துக் காட்ட முடிகிறது. அதன் விளைவாக சாமானிய மக்கள் மேலும் உணர்ச்சி வசப்பட்டு, எதற்கும் துணிந்தவர்களாகி விடுவதைக் காண்கிறோம். இச்சூழ்நிலையில் நியாய அநியாயங்கள் தெளிவுபடாது போகின்றன. பிரதம மந்திரி அவசரம் அவசரமாக டில்லியிலிருந்து வந்து பலரைக் கண்டு பேசிவிட்டுப் போனுர். அதன் விளைவாக அமைதி கைகூடும் என்ற நம்பிக்கை அவருக்கே ஏற்படவில்லை. ஏற்கனவே திட்டமிட்டபடி ஆப்கானிஸ்தான் செல்ல வேண்டியிருந்ததால் உள்துறை மந்திரியை அனுப்பி வைத்தார். சவான் அளிக்கும் ஆலோசனைகள் பலனளிக்குமா என்பது இப்போது தெரியாது. எல்லாத் தலைவர்களையும் ஒன்ருக அழைத்துப் பேசி, தெலிங்கானுத் தலைவர்கள் ஏற்கக்கூடிய ராஜீயப் பைசலைக் காண்பதைத் தவிர வேறு வழியில்லை என்று ஆகிவிட்டது.

மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த இந்தூரில் நடைபெற்ற ஒரு மல்லர் ஊர்வலத்தில் ஏதோ தவறு நிகழ்ந்தது. அது இரு கோஷ்டிகளிடையே பெருங் கலகமாக வெடித்துப் பல உயிர்களைக் கொள்ளை கொண்டு, சொத்து நஷ்டத்தையும் விளைவித்துள்ளது. இம்மாதிரி நிகழ்ச்சிகளில் குறுக்கிட்டு நவகாளியிலும் கல்கத்தாவிலும் காந்திஜி செய்து காட்டியது போல, தைரியத்துடன் உழைத்து அமைதியை நிலைநாட்டுவதற்குப் பாடு



### ஆசாரியர் அருள்வாக்கு

அம்பிகே! சூரியனுக்குக் கர்ப்பூர நீராஜனை காட்டுவது போலவும், மதிஒளி பட்டு உருகும் சந்திர காந்தக் கல்லின் நீரை எடுத்துச் சந்திரனுக்கே அர்க்கியம் தருவது போலவும், சமுத்திர பூஜை செய்யும்போது சிறிது நீரை எடுத்துக் கடலுக்கு அபிஷேகம் செய்வது போலவும், வாக்தேவதையான உன்னை நீ கொடுத்த வாக்காலேயே துதிக்கிறேன்.

படக்கூடிய தலைவர்களையே இன்று காணும் என்பது வருந்தத் தக்கது.

காங்கிரஸ் ஆட்சி புரிகின்ற அஸ்ஸாமிலும் உத்தரப் பிரதேசத்திலும் பதவிப் போட்டிகளும், அவற்றின் பகுதியான ஊழல்களும் மலிந்து காணப்படுகின்றன. கொள்கைகளும் கோட்பாடுகளும் பின்னுக்குப் போய், ஆதிக்க வெறி மேலோங்குகையில், என்ன வேண்டுமானாலும் நடக்கும்.

குழப்பமும் அமைதி யின்மையும் எங்கு ஏற்பட்டாலும், உடனே அதனைப் பயன்படுத்திக் கொண்டு தமது செல்வாக்கை வளர்த்துக் கொள்ளக் கம்யூனிஸ்டுகள் வந்து விடுகிறார்கள். இதனால் விளையக்கூடிய விபரீதங்களை விளக்க வேண்டிய அவசியமில்லை. இம்மாதிரி சந்தர்ப்பங்களில்தான் ஆன்மிகமும் தெய்வ பக்தியும் மேலோங்குவது அவசியம். அச்சூழ்நிலையில் காந்திய அடிப்படைகளான சத்தியம், அஹிம்சை, சேவா உணர்ச்சி ஆகியவை மீண்டும் செல்வாக்குப் பெற்றாலன்றி விமோசனமில்லை.

# தொழில் நஷ்டம்

அரசாங்கத் துறையிலுள்ள தொழில் ஸ்தாபனங்கள் திறம்பட, சிக்கனமாக, போதிய துரிதகதியில் நடைபெறுவது அவசியம் என்பதை ராஷ்டிரபதி கிரி சென்ற வாரம் நினைவூட்டினார். இம்மாதிரி அவை நடைபெற வேண்டும் என்பதுதான் பல பார்லிமெண்ட் கமிட்டிகளும், நிர்வாகச் சீர்திருத்தக் கமிஷனும் செய்துள்ள சிபாரிசு. நஷ்டத்திலும் திறமையில்லாமலும் வேலை செய்பவை விரைவில் திருந்துவதற்கு வழி வகை காணவேண்டுமெனப் பொது மக்களும் பார்லிமெண்ட் அங்கத்தினர்களும் கோருவது முற்றிலும் நியாயமே. இதைத் தவறாகப் புரிந்து கொண்டு, குறை கூறியோரைப் பிரதம மந்திரி கடிந்து கொண்டிருப்பது வருந்தத் தக்கது. அரசாங்கம் தன் தொழில் துறைப் பொறுப்பைக் கைவிட வேண்டும் என்று குறை கூறுவோர் விரும்புவதாகப் பிரதமர் நினைப்பதற்கு ஆதாரமே யில்லை. தனியாரிடம் அவற்றை ஒப்படைத்து விட்டு, அவர்களுடைய லாபம் மேலும் பெருகுவதற்கு வழி செய்வதுதான் அப்படிக் குறை கூறியவர்களின் நோக்கம் என்று ஸ்ரீமதி காந்தி சொல்லியிருப்பதும் ஆதாரமற்றது. அவை அனைத்துமே நன்றாகவும் லாபகரமாகவும் நடந்தால்தான் சமூகம் நன்மையடையும், வேலை வாய்ப்பு கூடுதலாகும், கடன் தவணைகளைச் சரியாகச் செலுத்த முடியும். இப்பொழுது வருஷம் ரூ 150 கோடி வரை ஏற்படும் நஷ்டத்தை அதிக வரியாக மக்கள் தான் செலுத்த வேண்டியிருக்கிறது. இதைத் தவிர்க்க முடியும், தவிர்க்க வேண்டும். தனியார்த் துறையிலுள்ள நிர்வாக நிபுணர்களின் உதவியை இதற்காகக் கோரிப் பெற அரசு முற்பட்டிருப்பதை வரவேற்கிறோம்.

தனியார்த்துறை விவகாரங்களைப் பரிசீலித்தால் அவற்றிலும் ஊழல்கள் தென்படும் என்கிறார் பிரதமர். எந்தத் துறையிலும் ஊழலே கூடாது, நஷ்டமும் ஏற்படலாகாது. ஆனால் தனியார்த் தொழிற்சாலை நஷ்டப்பட்டால் பாதிக்கப்படுவோர் அதன் பங்குதாரர். சர்க்கார்த் தொழிற்சாலை சீரழிந்தால் மக்களின் வரிப்பளுதான் உயருகிறது. ஆகையால்தான் அவற்றின் சீரான நிர்வாகம் வற்புறுத்தப்படுகிறது.

# என்ன சேதி?

### வாழ்த்துகிறோம்!

திரு காசிவிசுவநாதன் இலங்கை இந்திய வர்த்தக சங்கத்தின் புதிய தலைவராகத் தெரிவு செய்யப்பட்டிருக்கிறார் என்று அறிந்து மகிழ்கிறோம். இலங்கை செட்டிநாடு கார்ப்பொரேஷனின் மானேஜராகப் பணியாற்றும் இவர் திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரியில் படித்துண்டு திரு வை. கோவிந்தன் நடத்திய ''சக்தி'' பத்திரிகையில் இரண்டு

வருட காலம் சேவை செய்தார். பிறகு 1941-ல் இலங்கை வந்து செட்டிநாடு கார்ப்பொரேஷனில் சேர்ந்தார். இந்தியாவிலிருந்து வரும் எழுத்தாளர்களுக்கும் தொழிலதிபர்களுக்கும் திரு காசியின் விருந்தோம்பும் பண்பு நன்கு தெரிந்திருக்கும்.

பத்திரிகையாளராகவும் விளங்கிப் பொருளாதாரத் துறையிலும் நல்ல அனுபவம் பெற்றிருக்கும் திரு காசி விசுவநாதன் தலைமையில் இலங்கை இந்திய வர்த்தகச் சங்கம் நற்பணியாற்றிச் சிறப்புற வாழ்த்துகிறோம்.



திரு காசிவிசுவநாதன்

## அவசரச் சட்டம்

டிக்கெட்டில்லாமல் ரயில்களில் பிரயாணம் செய்வோரிடம் வசூலிக்கக்கூடிய அபராதங்களின் அளவைக் கடுமையாக உயர்த்தி ஓர் அவசரச் சட்டத்தை யூனியன் சர்க்கார் பிறப்பித்திருக்கிறார்கள். அதிகபட்சமாக ரூ 100 அபராதம் விதிக்கலாம் என்று இருந்ததை ரூ 500 ஆக உயர்த்தியுள்ளனர். குறைந்த பட்ச அபராதம் 50 பைசாவிலிருந்து ரூ 50 ஆக உயருகிறது. டிக்கெட்டில்லாத ரயில் பயணங்களால் ஏற்படும் நஷ்டம் 25 கோடி ரூபாய் இருக்கலாம் என்று மதிப்பிடுகிறார்கள். எனவே அதைக் கூடியவரை குறைப்பதற்கு இயன்ற அனைத்தையும் செய்ய வேண்டியதுதான். ஆனால் அபராதத் தொகை இப்படி உயர்ந்தால் மட்டும் நோக்கம் கைகூடு மெனத் தோன்றவில்லை. ரயில்வே ஊழியர்களின் தணிக்கையும் கண்டிப்பாக வேண்டும். டிக்கெட் வாங்காமல் அவசரத்தில் ரயிலேறித் தாமாகவே முன் வந்து உரிய கட்டணங்களைச் செலுத்த முன் வருவோருக்குச் சொற்ப அபராதம் விதிப்பதற்கு வழிவகை செய்வது அவசியம். டிக்கெட்டுகளைத் துரிதமாக விற்பதற்கு ஸ்டேஷன்களில் அதிக வசதி தேவை. டிக்கெட்டுகளைத் துரதிருஷ்டவசமாகத் தொலைத்துவிட்டவர்கள் விஷயத்திலும், 'சீசன்' டிக்கெட்காரர்கள் விஷயத்திலும் பரிவு காட்டுவது அவசியம். இதற்கு ஏற்ப விதிமுறைகளை அமைக்குமாறு கோருகிறோம்.

---



மே தினத்தன்று மகாத்மா காந்தியின் நூற்றாண்டு விழாவும், காத்ரெஜ் தொழில் நிறுவனத்தை ஆரம்பித்த ஏ. பி. காத்ரெஜ் அவர்களின் நூற்றாண்டு விழாவும் ஒன்றாகப் புதுதில்லி சாப்ரு ஹவுஸில் வி. வி. கிரி அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. திரு வி. வி. கிரி நேச பக்தரும் தொழில் மேதையுமான காத்ரெஜின் நூற்றாண்டுக் கண்காட்சியைப் பார்வையிடுகிறார்.

★

கோயம்பேடு குசலபுரீசுவரர் ஆலயத்தில் அருணகிரிநாதர் விழா விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. விழாவன்று நடந்த அருணகிரிநாதர் பாடல் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பின்னணிப் பாடகர் ஸ்ரீ டி. எம். சௌந்தரராஜன் பரிசுகள் வழங்கினார்.



# ராஜாஜியின் கருத்துக்கள்

இந்தியாவுக்கும் சீனவுக்குமிடையே நேப்பாளம் தனி சுதந்திர நாடானதால் நடுநிலைமை வகிக்க வேண்டும் என்பதற்காக நேப்பாளத்தை விட்டு வெளியேறுமாறு தலாய் லாமாவின் பிரதிநிதி ஸ்ரீ ஸர்கே அவர்களுக்கு நேப்பாள அரசாங்கம் உத்தர விட்டிருப்பது நல்ல அறிகுறியல்ல. இவ் விஷயம் வெறும் நேப்பாளத்தின் சட்டம்—ஒழுங்கு சம்பந்தப்பட்ட விஷயமே தவிர அதற்கு அரசியல் வண்ணப் பூச்சு அளிப்பது சரியல்ல என்று நேப்பாள அரசாங்க உத்தியோகஸ்தர்கள் மேற்கண்ட செய்திக்கு விளக்கம் தருகிருர்கள். நேப்பாளத்தில் நிலவி வந்த ராணுக்களின் ஆட்சியை அப்புறப்படுத்தி இன்றைய ஆட்சியைச் சகல செல்வாக்குடன் நிலைநாட்ட எவ்வளவு தூரம் ஜவாஹர்லால் முயற்சிகள் எடுத்துக் கொண்டார் என்பது எனக்குத் தெரியும். நேப்பாளத்தின் சிநேகம் இப்பொழுது நடுநிலைமையாக மாறி விட்டிருக்கிறது — சீன அடைந்து வரும் ராணுவ பலத்தின் விளைவாக.

★

ஜூன் 3ந் தேதிய இந்தியன் எக்ஸ்பிரஸ், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் பற்றி மத்திய மந்திரி பேசியிருப்பதின் மேல் எழுதியுள்ள தலையங்கத்தின் ஒரு பகுதியை என் குறிப்பு ஒன்றும் சேர்க்காமல் அப்படியே தருகிறேன் :

''சீனவில் இருபதாண்டுகள் மதப் பிரசாரம் செய்துவிட்டு வந்த கிறிஸ்தவ மதப் பிரசாரகரைப் பற்றி ஒரு கதை சொல்லுவதுண்டு. அவரை, 'எத்தனை பேர்களை மதம் மாற்றினுய்?' என்று கேட்டதற்கு, 'ஒரே ஒருவர்தான்' என்று சொல்லி விட்டு, 'மற்றவர்கள் எல்லாம் அரிசிச் சோறுக்காக கிறிஸ்தவர்கள்' என்ருராம். அதே போன்ற கதையுடன் தான் மத்திய சுகாதார — குடும்பக் கட்டுப்பாடு மந்திரி திரு கே. கே. ஷா, பைர் காந்தாவிலிருந்து திரும்பியிருக்கிருர். குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்ட நபர்கள் 3000 பேர்களில் ஒரே ஒருவர் தான் உண்மையான ஆர்வத்துடன் முன் வந்தாராம். மற்றவர்கள் எல்லாரும் பிற ஆசைகளினல் உந்தப்பட்டு வந்தவர்களாம். குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தில் மந்திரிக்கு இருந்த நம்பிக்கை தளர்ந்து, திரு ஷா அந்த ஜில்லாவில் தீவிர விசாரணை நடத்திருர். குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் அவ்வளவும் மக்களுக்கு அளிக்கப்படும் அற்பப் பண ஆசையையும், உள்ளூர் பெருந்தனக்காரர்களின் செல்வாக்கையும் வைத்துத்தான் நடந்திருக்கிறது. மக்கள் மனமொப்பி வருவதற்குப் பதில் வற்புறுத்தப் பட்டதாகத்தான் தெரிகிறது என்று மந்திரி ஷா சொன்னுர்.''

★

மேற்கு ஜெர்மனி இதுகாறும் கடைப்பிடித்து வந்த ஹால்ஸ்டெயின் கொள்கையை மாற்றிக் கொள்ள மனமொப்பி முன்வந்து விட்டது. இம்மாறுதல் மிகப் பெரிய மாறுதலாகும். இதுவரை மேற்கு ஜெர்மனி, கிழக்கு ஜெர்மனியை ஒரு பிரச்னையாகக் கருதி வந்ததே தவிர தனி நாடாகக் கருதியதில்லை. கிழக்கு ஜெர்மனியைத் தனி நாடாகக் கருதும் நாட்டுடன் ராஜதந்திர உறவுகளை வைத்துக் கொள்ள முதல் தடவையாக இப்போது மேற்கு ஜெர்மனி முன்வந்திருப்பதாகக் கூறப்படுகிறது.

★

கம்போடியா, கிழக்கு ஜெர்மனியை அங்கீகரித்ததின் காரணமாக, மேற்கு ஜெர்மனி அரசாங்கம் கம்போடியாவுடன் கொண்டிருந்த ராஜதந்திர உறவுகளை முறித்துக் கொண்டது. சமீபத்தில் ஈராணும், ஈராக்கும் கிழக்கு ஜெர்மனி அரசாங்கத்தை அங்கீகரித்தன. அந்நாடுகளுடன், மேற்கு ஜெர்மனி ராஜதந்திர உறவுகளைப் பற்றி இது வரை ஒரு முடிவும் செய்யவில்லை. அந்நாடுகள் தொடர்ந்து ராஜதந்திர உறவுகளை மேற்கு ஜெர்மனி அரசாங்கத்துடன் வைத்துக் கொண்டுதான் இருக்கின்றன. ஹால்ஸ்டெயின் கொள்கையை, தனித் தனி விவகாரங்களுக்கு ஏற்ப அனுஷ்டிப்பது என்ற நிலைக்கு மேற்கு ஜெர்மனி வந்திருக்கிறது போலும்.

★

சுதந்திரக் கட்சியின் பதினேராவது ''பிறந்த நாளை''யொட்டி ஆசாரிய ரங்கா எனக்கு ஒரு வாழ்த்துத் தந்தி அனுப்பியிருக்கிருர். காலண்டரைப் பார்த்து விழாக் கொண்டாடும் முறைக்கு நான் விசேஷ முக்யெத்துவம் அளிக்காமல் இருப்பதற்குக் கற்று வைத்திருக்கிறேன். இந்தப் பத்து ஆண்டுகளில் என்ன சாதித்திருக்கிறோம் ? மத்திய சர்க்காரின் கொள்கைகளைப் பெரும் அளவில் மாற்றியிருக்கிறோம். ஆனல் மத்திய சர்க்கார், கோட்டா, பர்மிட், லைசென்சுகள் வழங்கத் தனி சுதந்திர நிர்வாகக் குழு ஏற்படுத்தும் வரை, நாம் ஏதோ சாதித்து விட்டாற்போல் என்னுல் திருப்தி கொள்ள முடியாது. தில்லி உயர்நீதி மன்றம் எப்படிச் சுதந்திரமாக இயங்குகிறதோ, அப்படி மேற்கண்ட குழு இயங்கவேண்டும்.

காங்கிரஸிடமிருந்து அரசாங்கத்தைப் பறிக்கச் சுதந்திரக் கட்சி நிறுவப்படவில்லை. பல அடிப்படைக் கொள்கைகளின் மீது சுதந்திரக் கட்சி நிறுவப்பட்டுள்ளது. இது மற்றக் கட்சிகளின் கூட்டுறவை நம்பியிருக்கிறது. மற்றக் கட்சிகள், ஆளும் கட்சியின் அரசாங்க இயந்திரம், அந்தக் கட்சி எவ்வளவு இழி நிலைக்கு வந்து விட்டதோ அந்த அளவுக்குத் தாழ்ந்து விட்டதை உணர்ந்து செயல்பட வேண்டும். காங்கிரஸ் கட்சி மக்களின் மதிப்பிலிருந்து விழுந்து விட்டது. மீண்டும் பழைய நிலையை அது ஒருநாளும் அடைய முடியாது.

# ஷண்மத விழாவின் உன்னதத் தொடக்கம்





இந்திய சமய சரித்திரத்திலேயே மகத்தான புனிதமான சங்கர—ஷண்மத மகாநாடு சென்னையில் ஆழ்வார்ப்பேட்டை, வீனஸ் காலனியில் ஜூன் முதல் தேதி தொடங்கப் பெற்ற வைபவம் சென்னை மக்களும், அதில் கலந்து கொண்டு, கண்டு களித்தவரும் என்றைக்கும் மறக்க முடியாத நிகழ்ச்சி.

''பிரம்மம் ஒன்றே சத்தியம், உலகு பொய்'' என்று ஞான மார்க்கத்தைப் பறைசாற்றி ஆத்ம லாபத்துக்கு அத்வைதத்தை நிலை நாட்டிய ஞான குரு சங்கரர், ''ஷண்மதபிரதிஷ்டாபகாசார்யர்'' என்ற அடைமொழிக்கும் பூரணமாக உரியவர் என்பதை வலியுறுத்தி மக்களுக்கு நினைவூட்ட ஸ்ரீ காஞ்சி ஜகத் குருவின் ஆக்ஞையில் கூட்டப்பட்டது இம்மகாநாடு.

ஞான முதிர்ச்சியும், அனுபவ முயற்சியும் அதிகமில்லாத சாதாரண உலக மக்களுக்கு—நம்மில் முக்காலே மூன்றுவீசம் பேர்கள் இவ்வகையைச் சேர்ந்தவர்கள்தானே! — உய்யும் வழி பக்தி மார்க்கமே என்றும், பக்திக்கு உகந்த மூர்த்திகள் எண்ணற்றவைகளாக இருந்தாலும் முக்கியமாக, மனோகரமாக உள்ள விநாயகர், முருகன், விஷ்ணு, சூரியன் அம்பிகை, ஈசுவரன் முதலிய ஆறு மூர்த்திகளை ஆராதிப்பது சாலச் சிறந்தது என்பதை அத்வைதத்தைக் கூறிய அதே வாக்குத் தெளிவுடனும், வேகத்துடனும் கருணையுடனும், சொல்லழகுடனும் உலகுக்கு உணர்த்தியவர் ஜகத் குரு ஆதி சங்கரர். இத் தெய்வங்களுக்குரிய ஆராதனைக் கிரமங்களை இவற்றில் இடைக்காலத்தில் புகுந்துவிட்ட தவறான, விரும்பத் தகாத போக்குகளை நீக்கி, அவற்றை வேத மார்க்கத்துக் கிணங்கச் செய்து, மக்கள் வழிபாட்டுக்கு உரியதாக்கி வகை செய்து அருளிய ஞான வள்ளல் ஆதி சங்கரர்.



இந்த மகத்தான பக்திப் பணியின் உன்னதத்தைக் கால வேகத்தின் கொடுமையினால் மக்கள் மறந்து விட்டனர். இதை மறுபடியும் அவர்களுக்கு நினைவுபடுத்த, அவர்களை நல் வழியில் நடக்கச்செய்ய, சமய வழிபாடுகளின் மூலம் தோன்றிவிட்ட பிரிவுகள் எல்லாம் உண்மையில் ஒன்றிப் பிணைந்ததே என்ற



விநாயகர், முருகன், விஷ்ணு, சிவன், சூரியன், காமாட்சி ஆகியோரது படங்கள் வீதி ஊர்வலமாகக் கபாலீசுவரர் ஆலயத்திலிருந்து குழிக்கரை பிச்சையப்பா குழுவினர் நாதசுரம் முழங்க வினஸ் காலனியிலுள்ள ஷண்மத மகாநாட்டுப் பந்தலுக்கு வந்து சேர்ந்தன.

மகாநாட்டுப் பந்தலில் தாற்காலிக ராஷ்டிரபதி டாக்டர் வி. வி. கிரி அவர்களுக்கு ஸ்ரீ வைத்திய சுப்பிரமணிய அய்யர் பூரணகும்பம் கொடுத்து மரியாதையோடு வரவேற்கிறார்.

'கணபதி மகிமை' பற்றி சங்கீத உபன்யாசம் செய்த ஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள்.

ஸ்ரீ பாபநாசம் சிவன் குழுவினர் ஊர்வலத்தில் மெய்யுருகப் பாடிப் பக்தர்களை மகிழ்வித்தனர்.

ஷண்மத தெய்வங்களும், ஆதி சங்கரர் திருவுருவப் படமும் ஊர்வலமாகப் புறப்படக் காத்திருக்கின்றன.





ஆதாரத்தை விளக்க, சங்கரர் வழி வந்து, மறு சங்கரர் என நம்மிடையே நடமாடும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவாள் திருவுள்ளம் கொண்டதன் விளைவாக எழுந்ததே இம்மகாநாடு.

விழாப் பந்தலும் மேடையும் எஸ். ஜி. ரத்தினம் அவர்களின் கலை உணர்வுச் சிறப்பில் அற்புதக் காட்சி அளித்தன. மேடைக்குப் பின்னால் ஆதி சங்கரரின் உருவப் படமும், அரங்கத்தின் எதிர்க் கோடியில் காஞ்சி ஆசார்யாளின் முழு அளவு உருவப் படமும் மகாநாடு அவர்களின் அருள் பார்வையிலேயே நடக்கிறது என்பதை இவ்வுருவப் படங்கள் மெய்யாகவே உணர்த்தின. மேடையின் ஒரு பக்கம் ஸ்ரீ சகடபுரம் பதரி சங்கராசாரிய ஸ்வாமி கம்பீரமாக வீற்றிருந்தார். தொடக்க விழாத் தலைவர், முன்னாள் உயர் நீதிபதி பி. பி. கஜேந்திர கட்கரும், விழா வைத் தொடக்க வைத்த மதிப்புக்குரிய ராஷ்டிரபதி வி. வி. கிரியும் மற்றப் பிரமுகர்களும் வரிசையாக அமர்ந்திருந்தனர். முன்னால் பண்டிதர்கள் பலர் வீற்றிருந்தது இது







1. ஷண்மதங்கள் பற்றிய புகைப்பட, ஓவியக் கண்காட்சியைத் திறந்துவைத்த தஞ்சாவூர் மன்னர் ஸ்ரீ ராஜாராம் சாகேப் சத்ரபதியையும் அன்றைய விழா வுக்குத் தலைமை தாங்கிய தலைமை நீதி பதி திரு கே. வீராசாமியையும், விழா நிர்வாகக் கமிட்டியினரையும் காண லாம். 2. தாற்காலிக ராஷ்டிரபதி தம் தொடக்க உரையை நிகழ்த்துகிறார். 3. சங்கர-ஷண்மத மகாநாட்டை டாக்டர் கிரி அவர்கள் தொடங்கி வைத்ததும், பம் பாய் சர்வகலாசாலை துணைவேந்தர் டாக்டர் பி. பி. கஜேந்திரகட்கர் தலைமை உரையாற்றுகிறார். 4. ஷண்மதங்கள் பற்றிய புகைப்படக் கண்காட்சியைத் தாற்காலிக ராஷ்டிரபதி டாக்டர் வி. வி. கிரி பார்வையிடுகிறார். அருகே தொல் பொருள் இலாகா இயக்குனர் திரு ஆர். நாகசாமி. 5. சங்கர - ஷண்மத மகாநாட்டில் சர்வதேச இந்தியப் பண் பாட்டுக் கழகத்தின் இயக்குனர் திரு லோகேஷ் சந்திராவை ஸ்ரீ சதாசிவம் அவர்கள் வரவேற்கிறார். 6. சங்கர - ஷண்மத மகாநாட்டுக்கு விஜயம் செய்த பிரமுகர்கள்.



ஒரு வித்வத் சதஸ் என்ற நினைவை ஊட்டியது.

'ச்ருதி ஸ்மிருதி புராணனும்' என்று ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பிரார்த்தனை பாடியதும் தெய்விகம் பந்தலுக்குள் நுழைந்துவிட்டது. ஆதி சங்கரர், காஞ்சி ஜகத் குரு இவர்களைத் துதித்தபின் தெய்வ பேதமின்மை கூறும் சங்கரரது சுலோகம், பாசுரம், தேவாரம் முதலியவற்றை எம். எஸ். இசைத்தார்.

மகாநாட்டின் நோக்கத்தை வரவேற்புரையில் ஸ்ரீ எம். பக்தவத்சலம் மிக அழகாக விளக்கி யிருந்தார். அவரது சுகவீனத்தால் அவருடைய புதல்வி ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன் இவ்வுரையைப் படித்தார். ''உலக சமயங்களில் மிக புராதனமான ஹிந்து சமயத்தின் பிரிவுகள் அனைத்தும் பிணைகின்ற புனித தினம் இது. உணர்ச்சி பூர்வமான ஒருமைப்பாடு அரசியல் கோட்பாடுகளின் மீது அமைவதை விட சமய நெறிகளின் மீது அமைவதே எளிது. மக்கள் அனைவரையும் அன்பு வழியில் இணைக்கும் ஆதி சங்கரரின் ஷண்மத ஸ்தாபனப் பணி ஸ்ரீ காமகோடி ஸ்வாமிகளின் திரு உள்ளத்தில் விசேஷமாகப் பதிந்திருப்பது இயற்கையே'' என்றார் அவர்.

தர்ம ரக்ஷாமணி ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் தூய சம்ஸ்கிருதத்தில் வரவேற்புரை நிகழ்த்தினார்.

மன்னரும் மகான்களைப் போற்றும் நாடல்லவா நமது நாடு. இதைப் பற்றி மகாநாட்டைத் தொடங்கி வைத்த ராஷ்டிரபதி ஸ்ரீ வி.வி. கிரி அவர்கள் உணர்ச்சியுடன் குறிப்பிட்டார். ''நான் மிகுந்த மதிப்பும் மரியாதையும் வைத்திருக்கும் காஞ்சி காமகோடி பீடம் சங்கராசாரிய சுவாமிகளின் அநுக்கிரகத்தினாலும், ஊக்கத்தினாலும் இந்த மகாநாடு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. சமய மறுமலர்ச்சிக்கும், நமது கோயில்களின் திருப்பணிகளுக்கும் அவர் அரிய பணி ஆற்றி வருவது மட்டுமின்றி, நமது மக்களிடையே ஆன்மிக வளர்ச்சிக்கு மாபெரும் பணியாற்றி வதன் மூலம் நமது தனிப்பட்ட வாழ்க்கைக்கும் உறுதியான அடித்தளத்தை அமைத்துத் தந்திருக்கிறார். இம்மகாநாட்டினை ஏற்பாடு செய்த பெரியவாளுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்றார் ராஷ்டிரபதி.

தலைமை தாங்கிய பம்பாய் சர்வ கலாசாலைத் துணைவேந்தர் ஸ்ரீ கஜேந்திரகட்கர் பக்தி — ஞானம் — கர்மம் மூன்றையும் இசைவித்த ஆதி சங்கரரை நாவாரப் போற்றிப் பணிந்தார். காஞ்சி ஆசாரியர்களின் தார்மிக மறுமலர்ச்சிப் பணியை நெக்குருகிப் பாராட்டினார்.

கல்கத்தா உயர் நீதிபதி ஸ்ரீ பி. பி. முகர்ஜியும், ஸ்ரீ ம.பொ.சி. அவர்களும் சமய சமரசம் குறித்துச் சிந்தனைகளைச் சிந்திச் சிறப்புரை நிகழ்த்திய பின் ஸ்ரீ டி. வி. விசுவநாதய்யர் வந்தனோபசாரம் வழங்கினார்.

ஷண்மதங்கள் பற்றியும் அவற்றின் அடிப்படையான ''எம்மதமும் சம்மதம்'' என்ற ஒருமைப்பாடு பற்றியும் அறிஞர்களும் ஞானியர்களும், பண்டிதர்களும் பேசிக் கேட்டால் மட்டும் போதாது; இதை மக்கள் கண்ணால் கண்டும் உணர வேண்டும் என்ற உயர் நோக்கத்தில் இம்மகாநாட்டை யொட்டி ஒரு புகைப்பட ஓவியக் கண்காட்சி அமைக்கப்பட்டிருந்தது. பாரதத்தின் புண்ணிய க்ஷேத்திரங்கள் அவ்வளவையும் ஒரே காலத்தில் தரிசிப்பது போல் ஏராளமான கோவில்களின் பெரிய அளவு புகைப்படங்கள் வரிசை வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. இக் காட்சி, பூர்ணிமையும் ஸ்ரீ பெரியவாள் ஜயந்தியுமான மே 31ந் தேதி திறந்து வைக்கப்பட்டது.

கண்காட்சியை நான்கு பகுதியாக வகை செய்திருந்தனர். ஒன்று ஆதி சங்கரரின் வாழ்க்கை வரலாற்றுச் சம்பவங்கள், மற்றொன்று காஞ்சி காமகோடி பீடம் பெரியவாளின் வாழ்க்கை வரலாற்றுச் சித்திரங்கள்; மூன்றாவது ஷண்மதங்களுக்குரிய தேவதைகள்; அவர்களை முக்கியமாகக் கொண்ட கோவில்கள், இயந்திரங்கள், சக்கரங்கள் போன்றவை. நான்காவது திருக்கோவில்களின் புகைப்படங்கள்.

இக் கண்காட்சியைத் திறந்து வைக்கும் பணியைப் பெருமையுடன் மேற்கொண்ட தஞ்சை மன்னர் ஸ்ரீ ராஜாராம் ஸாஹிப் சத்திரபதி அவர்கள், ''இத்தனை கோவில்களையும் வாழ்வித்த சங்கரருக்கு எல்லா ஆலயங்களிலும் — வைஷ்ணவ ஆலயங்களில் ஸ்ரீ ராமாநுஜர் பிம்பம் இருப்பதுபோல் — குறைந்தது சிவாலயங்களிலாவது விக்கிரகம் வைக்க வேண்டும்'' என்றார். பிரதம நீதிபதி கே. வீராசாமி அவர்கள் கண்காட்சிக்கான நிகழ்ச்சியைத் தொடங்கி வைத்தார். அவர் ஆலய வழிபாட்டின் அவசியத்தை ஆணித்தரமாக எடுத்துரைத்தார். ஸ்ரீ ஜி. சந்திரசேகரன் ஆலயங்களின் கலைச் சிறப்புக்களைப் பாங்குடன் எடுத்துரைத்தார். தில்லி,சர்வதேச இந்தியக் கலாசார நிலைய இயக்குநர் ஸ்ரீ லோகேஷ் சந்திரா, ஸைபீரியா, மங்கோலியா, சீனா உள்ளிட்ட ஏனைய நாடுகளில் இந்தியக் கலாசாரம் எப்படி ஊன்றி யிருக்கிறதென்பதையும் நம் நாட்டிலேயே இக்கலாசாரம் எப்படிப் புறக்கணிக்கப்படுகிறது என்பதையும் மனத்தில் தைக்கும்படி உணர்ச்சியுடனும், அறிவு விளக்கத்துடனும் உரை ஆற்றினார்.

''நாடா''வைக் கத்தரிக்கோலால் துண்டித்துக் கண்காட்சி சம்பிரதாயமான முறையில் திறந்து வைக்கப்படவில்லை. தெய்விகத்தை நேரிலே உணர்த்த வந்த கண்காட்சி அல்லவா? கற்பூரம் ஏற்றி, விபூதி, குங்குமப் பிரஸாதத்துடன்தான் கண்காட்சி திறந்து வைக்கப்பட்டது.

இந்தக் கண்காட்சியை அற்புதமாக வரிசைப்படுத்தி, அழகாக அமைத்து, மயன் சிருஷ்டித்த மாளிகைபோல் இரவோடு இரவாகப் பிரமிப்பூட்டும் வகையில் எழுப்பிக் கொடுத்து எல்லோருடைய பாராட்டுதலுக்கும் பாத்திரமானவர் புதைபொருள் இலாகா டைரக்டர் ஸ்ரீ ஆர். நாகஸ்வாமி. அவருடைய செய்திறன் அற்புதம்.

மகோன்னத மகாநாட்டின் தொடக்கம் மகோன்னதமாகவே இருந்தது. அடுத்த எட்டு நாட்கள் எப்படி இருக்கப் போகிறது என்பதைக் கோடி காட்டி வைத்தது.

இருமல் மற்றும் தொண்டைப்
புண் கிருமிகளுக்கு
ஒரே-நிமிஷத்தில்
விடை கொடுப்பது

மருத்துவ நிரூபணம் பெற்ற

# ஸ்ட்ரெப்ஸில்ஸ்

இரண்டு தனிப்பட்ட ஆன்டிஸெப்டிக் மருந்துகள் அடங்கிய ஸ்ட்ரெப்ஸில்ஸ் தொண்டைப் புண்ணையும் இருமலையும் விளைவிக்கும் கிருமிகளை அதி விரைவாகக் கொல்லுகிறது.

**ஸ்ட்ரெப்ஸில்ஸ்**

ஆன்டிஸெப்டிக் தொண்டை மாத்திரைகள்.

கையடக்கமான அலுமினியம் ஃபாயில் ஸ்ட்ரிப்களில் விற்கப்படுகிறது.





பூட்ஸ்
ஆராய்ச்சியின்
தயாரிப்பு

CMBS-10-152 TAM

# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

முப்பதாம் அத்தியாயம்

## துவந்த யுத்தம்

மூடியில்லாத வழியில் குதிரைகள் போய்க் கொண்டிருப்பதாக வந்தியத்தேவனுக்குத் தோன்றியது. இந்த வைஷ்ணவன் நம்மை உண்மையில் ஏமாற்றி விட்டானா! சத்துருக்களிடம் நம்மைக் கொண்டு போய் ஒப்புவிக்கப் போகிறானா?

இருபுறமும் காடுகள் அடர்ந்திருந்தன. அவற்றுக்குள் பார்த்தால் கன்னங்கரிய பயங்கரமான இருள். அந்த இருண்ட காட்டில் என்னென்ன அபாயங்கள் என்



னென்ன விதத்தில் இருக்கின்றனவோ தெரியாது. சிறுத்தைகள், கரடிகள், யானைகள், விஷ ஜந்துக்கள் — இவற்றுடன் பகைவர்களும் மறைந்திருக்கக் கூடும்; யார் கண்டது? தெற்குத் திசையில் சோழ சைன்யம் கடைசியாகப் பிடித்திருக்கும் இடம் தம்பளைதான் என்று சொன்னார்களே? இவன் நம்மை எங்கே அழைத்துப் போகிறான்?

நல்ல வேளையாக நிலா வெளிச்சம் கொஞ்சம் இருந்தது. சந்திர கிரணங்கள் வானுற ஓங்கிய மரங்களின் உச்சியில் தவழ்ந்து விளையாடின. அதனால் ஏற்பட்ட சலன ஒளி சில சமயம் பாதையிலும் விழுந்து கொண்டிருந்தது. எதிரே மூன்று குதிரைகள் போவது சில சமயம் கண்ணுக்கு நிழல் உருவங்களாகத் தெரிந்தது. ஆனால் குதிரைகளின் குளம்புச் சத்தம் மட்டும் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தது.

திடீரென்று வேறு சில சததங்கள் கேட்டன. காட்டின் நடுவில் எதிர் பார்க்க முடியாத சத்தங்கள். பல மனிதக் குரல்களின் கோலாகல சத்தம். குதூகலமாக ஆடிப் பாடும் சத்தம். ஆ! அதோ மரங்களுக்கிடையில் வெளிச்சம் தென்படுகிறது. சுளுந்துகளின் வெளிச்சத்தோடு பெரிய காளவாய் போன்ற அடுப்புகள் எரியும் வெளிச்சமும் தெரிகிறது. ஆகா! இந்தக் காட்டின் நடுவே தாவடி போட்டுக் கொண்டு குதூகலமாயிருக்கும் வீரர்கள் யார்? சோழ நாட்டு வீரர்களா? அல்லது பகைவர் படையைச் சேர்ந்த வீரர்களா?

இதைப் பற்றி வந்தியத்தேவன் மிகச் சொற்ப நேரம்தான் சிந்தித்திருப்பான். அந்தச் சிறிய நேரத்தில் முன்னால் போன குதிரைகள் சட்டென்று நின்றதையும் ஒரு குதிரை பளீர் என்று திரும்பியதையும் வந்தியத்தேவன் கவனிக்கவில்லை. திரும்பிய குதிரை முன்னேக்கி வந்து வந்தியத் தேவன் குதிரையை அணுகியது. அதன் மேலிருந்தவன் வந்தியத்தேவன் பக்கம் சட்



டென்று சாய்ந்து ஓங்கி ஒரு குத்து விட்டான். அந்தக் குத்தின் அதிர்ச்சியினால் வந்தியத்தேவன் கதிகலங்கித் தடுமாறிய போது அவனுடைய ஒரு முழங்காலைப் பிடித்து ஓங்கித் தள்ளினான். வந்தியத்தேவன் தடால் என்று தரையில் விழுந்தான். வந்த வேகத்தில் அவன் குதிரை அப்பால் சிறிது தூரம் பாய்ந்து சென்று அப்புறம் நின்றது.

அதற்குள் அவனைத் தள்ளிய வீரன் குதிரையிலிருந்து கீழே குதித்து வந்தியத்தேவன் அருகில் வந்தான். திக்பிரமை கொண்டவனாய்த் தள்ளாடி எழுந்திருக்க முயன்ற வந்தியத்தேவனுடைய இடையிலிருந்த கத்தியைப் பறித்துத் தூர வீசி எறிந்தான். உடனே வந்தியத்தேவனுக்குப் புத்துயிர் வந்தது. அத்துடன் ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. ஒரு குதி குதித்து எழுந்து நின்றான். இரண்டு கையையும் இறுக மூடிக் கொண்டு வஜ்ரம் போன்ற முஷ்டியினால் தன்னைத் தள்ளிய ஆளைக் குத்தினான். குத்து வாங்கிக் கொண்டவன் சும்மா இருப்பானா? அவனும் தன் கை வரிசையைக் காட்டினான். இருவருக்குள்ளும் பிரமாதமான துவந்த யுத்தம் நடந்தது. கடோத்கஜனும் இடும்பனும் சண்டை போடுவது போல் போட்டார்கள். வேடன் வேடந் தரித்த சிவபெருமானும் அருச்சுனனும் கட்டிப் புரண்டதைப் போல் புரண்டார்கள். திக்கஜங்களில் இரண்டு இடம் பெயர்ந்து வந்து ஒன்றோடொன்று மோதிக் கொள்வது போல் அவர்கள் மோதிக் கொண்டார்கள்.

வந்தியத் தேவனுடன் வந்த ஆழ்வார்க்கடியானும் அவர்களுக்கு முன்னால் வந்த வீரர்களும் விலகி நின்று ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டு நின்றார்கள். மரக் கிளைகளின் அசைவினால் அடிக்கடி சலித்த நிலா வெளிச்சத்தில் அவர்கள் அந்த அதிசயமான சண்டையைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சீக்கிரத்தில் காலடிச் சத்தங்கள் கேட்டன. கையில் கொளுத்தப்பட்ட சுளுந்துகளுடன் வீரர்கள் சிலர் மரக் கிளைகளை விலக்கிக் கொண்டு அவ்விடத்துக்கு வந்தார்கள். அப்படி வந்தவர்களும் அதிசயத்துடன் அந்தத் துவந்த யுத்தத்தைப் பார்த்துக்கொண்டு நிற்கலானார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் சுற்றிலும் ஒரு பெரிய கூட்டம் கூடிவிட்டது.

கடைசியாக வந்தியத்தேவன் கீழே தள்ளப்பட்டான். அவனைத் தள்ளிய வீரன் அவன் மார்பின் பேரில் ஏறி உட்கார்ந்து கொண்டு இடையில் சுற்றியிருந்த துணிச் சுருளை அவிழ்த்தான். அதற்குள்ளிருந்த ஓலையைக் கைப்பற்றினான். அதைத் தடுப்பதற்கு வந்தியத்தேவன் ஆன மட்டும் முயன்றும் அவன் முயற்சி பலிக்க வில்லை.

ஓலை அவ்வீரனுடைய கையில் சிக்கியதும் துள்ளிப் பாய்ந்து சுற்றிலும் நின்றவர்கள் பிடித்திருந்த சுளுந்து வெளிச்சத்தண்டை சென்றான். அவன் ஒரு சமிக்ஞை செய்யவும் மற்றும் இரு வீரர்கள் ஓடி வந்து வந்தியத்தேவன் தரையிலிருந்து எழுந்திருக்க முடியாமல் பிடித்துக் கொண்டார்கள்.

வந்தியத்தேவன் சொல்ல முடியாத ஆத்திரத்துடனும் தாபத்துடனும், "பாவி வைஷ்ணவனே! இப்படிப் பட்ட சிநேகத் துரோகம் செய்யலாமா? அவனிடமிருந்து அந்த ஓலையைப் பிடுங்கு!" என்று கத்தினான்.

"அப்பனே! என்னால் அது இயலாத காரியம் ஆயிற்றே!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"சீச்சீ! உன்னைப் போன்ற கோழையை நான் பார்த்ததேயில்லை! உன்னை வழித் துணைக்கு நம்பி வந்தேனே?" என்றான் வந்தியத்தேவன்.

ஆழ்வார்க்கடியான் குதிரையிலிருந்து சாவதானமாக இறங்கி வந்தியத்தேவன் அருகில் சென்று, அவன் செவியில், "அட, அசடே! ஓலை நீ யாருக்குக் கொண்டு வந்தாயோ, அவரிடந்தான் போயிருக்கிறது! ஏன் வீணாகப் புலம்புகிறாய்?" என்றான்.

சுளுந்து வெளிச்சத்தில் ஓலையைப் படித்துக் கொண்டிருந்த வீரனுடைய முகத்தை மற்ற வீரர்கள் பார்த்து விட்டார்கள். உடனே ஒரு மகத்தான குதூகல ஆரவாரம் அவர்களிடமிருந்து எழுந்தது.

"பொன்னியின் செல்வர் வாழ்க! வாழ்க!"

"அந்நிய மன்னரின் காலன் வாழ்க!"

"எங்கள் இளங்கோ வாழ்க!"

"சோழ குலத் தோன்றல் வாழ்க!" என்பன போன்ற கோஷங்கள் எழுந்து அந்த வனப் பிரதேசமெல்லாம் பரவின. அவர்களுடைய கோஷங்களின் எதிரொலியே போல் மரக் கிளையில் தூங்கிக் கொண்டிருந்த பட்சிகள் விழித்தெழுந்து இறகுகளைச் சட சட வென்று அடித்துக் கொண்டு பலவித ஒலிகளைச் செய்தன.

இதற்கு முன் வந்திருந்தவர்களைத் தவிர இன்னும் பல வீரர்களும் என்ன விசேஷம் என்று தெரிந்து கொள்வதற்காகத் திடுதிடு வென்ற சத்தத்

துடனே மரஞ் செடி கொடிகளை விலக்கிக் கொண்டு ஓடி வந்தார்கள். கூட்டம் பெருகுவதைக் கண்ட வீரன் சுற்றிலும் ஒரு முறை திரும்பிப் பார்த்து, ''நீங்கள் அனைவரும் பாசறைக்குச் செல்லுங்கள். விருந்துக்கு வேண்டிய ஏற்பாடு செய்யுங்கள். சற்று நேரத்துக்குள் நான் வந்துவிடுகிறேன்'' என்று சொல்லவே, அவர்கள் எல்லாரும் ஒரு மனிதனைப் போல் விரைந்து அவ்விடம் விட்டுப் போய் விட்டார்கள்.

நன்றாகக் குத்தும் அடியும் பட்ட வந்தியத்தேவன் தரையில் உட்கார்ந்தபடி இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான். உடம்பில் அடிபட்ட வலியெல்லாம் மறந்துவிடும்படியான அதிசயக் கடலில் அவன் மூழ்கியிருந்தான்.

'' ஆகா ! இவர்தான இளவரசர் அருள்மொழிவர்மர் ! இவர் கையிலேதான் எவ்வளவு வலிவு ! என்ன விரைவு! குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்பட வேண்டும் என் பார்களே ! குத்துப்பட்டால் இவர் கையினல் அல்லவா குத்துப்பட வேண்டும் ! இவரிடம் அருச்சுனனுடைய அழகும், கம்பீரமும் இருக்கிறது ! பீமசேனனுடைய தேக பலம் இருக்கிறது! நாடு நகரமெல்லாம் இவரைப் போற்றிப் புகழ்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லைதானே!'' என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான்.

இந்தக் கதைக்குப் பெயர் அளித்த அரசிளங் குமாரரை, தமிழகத்தின் சரித்திரத்திலேயே இணை யாரும் சொல்ல முடியாத வீராதி வீரரை, சோழ மன்னர் குலத்தை அழியாப் புகழ்பெற்ற அமரர் குலமாக்கினவரை, பின்னல் இராஜராஜர் என்று பெயர் பெறப் போகும் அருள்மொழிவர்மரை, இவ்விதம் சமயமில்லாத சமயத்தில் அசந்தர்ப்பமான நிலைமையில், இராஜகுல சின்னம் எதுவும் இல்லாமல் நேயர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கும்படி நேர்ந்து விட்டது. இது நேயர்களுக்குச் சிறிது மனக் குறை அளிக்கக் கூடியது இயற்கைதான் ! ஆயினும் என்ன செய்யலாம் ? நம் கதாநாயகனுகிய வந்தியத் தேவனே இப்போதுதான் அவரை முதன் முதலில் சந்தித்திருக்கிறான் என்றால், நாம் எப்படி அவரை முன்னதாகப் பார்த்திருக்க முடியும் !

அருள்மொழித் தேவர் வந்தியத்தேவனை நோக்கிச் சமீபத்தில் வந்தார். மீண்டும் அவருடைய கை முஷ்டியின் பலத்தைச் சோதிக்க வருகிறாரோ என்று வந்தியத்தேவன் ஒரு கணம் திடுக்கிட்டுப் போனான்.

ஆனல் அவருடைய புன்னகை ததும்பிய மலர்ந்த முகத்தைப் பார்த்து அந்தச் சந்தேகத்தை மாற்றிக் கொண்டான்.

''அன்பரே! வருக! வருக! அழகிய இலங்கைத் தீவுக்கு வருக ! சோழ நாட்டு வீராதி வீரர்களுடனே சேர்வதற்கு இத்தனை தூரம் கடல் கடந்து வந்தீர் அல்லவா? அப்படி வந்த உமக்கு நான் அளித்த வீர வரவேற்பு திருப்தி அளித்திருக்கிறதா? அல்லது அது போதாது, இன்னும் சிறிது படாடோபமான வரவேற்பு அளிக்க வேண்டும் என்று கருதுகிறீரா ?'' என்று இளவரசர் கூறிப் புன்னகை பூத்தார்.



வந்தியத்தேவன் குதித்து எழுந்து வணக்கத்துடன் நின்று, ''இளவரசே! தங்கள் தமக்கையார் அளித்த ஓலை தங்களிடம் சேர்ந்து விட்டது. என் கடமையும் தீர்ந்து விட்டது. இனி இந்த உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் எனக்கில்லை. தங்களுக்கு விருப்பமானல் இன்னும் சிறிது நேரம் நாம் யுத்த காண்டம் படித்துப் பார்க்கலாம்!'' என்றான்.

'' ஆகா ! உமக்கு என்ன சொல்வதற்கு? உம் உயிரைப் பற்றி இனி உமக்குக் கவலையில்லை. அந்தக் கவலை இனி என்னுடையது. இல்லாவிடில் நாளைக்கு இளையபிராட்டிக்கு என்ன மறுமொழி சொல்வேன் ? நண்பரே ! இப்போது நான் படித்த ஓலை என் தமக்கையாரின் திருக் கரத்தினலேயே எழுதப்பட்டதாகத் தெரிகிறது. அவர் உம்மிடம் அதை நேரில் கொடுத்தாரா ?'' என்று கேட்டார்.

''ஆம், இளவரசே! இளையபிராட்டியின் திருக் கரங்களிலிருந்து நேரில்

இந்த ஓலையைப் பெறும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. பின்னர் எங்கும் நிற்காமல் இரவு பகல் பிரயாணம் செய்து வந்தேன்'' என்ருன்.

''அது நன்ருய்த் தெரிகிறது. இல்லாவிடில் இவ்வளவு விரைவில் இங்கு வந்திருக்க முடியுமா? இப்படிப்பட்ட அரிய உதவி செய்தவருக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!'' என்று சொல்லி விட்டு, இளவரசர் வந்தியத்தேவனை மார்புற அணைத்துக் கொண்டார். அப்போது வந்தியத்தேவன் சொர்க்கலோகத்தில் தான் இருப்பதாகவே எண்ணினன். அவன் உடம்பிலிருந்த வலியெல்லாம் மாயமாய் மறைந்து விட்டது.

## முப்பத்தோராம் அத்தியாயம்

# "ஏலேல சிங்கன்" கூத்து

**வ**னத்தின் மத்தியில் உலர்ந்த குளத்தைச் சுற்றி மரங்கள் வளைவு வரிசையாக வளர்ந்து அதனல் இடைவெளி ஏற்பட்டிருந்த இடத்தில் சுமார் ஆயிரம் சோழ வீரர்கள் தாவடி போட்டிருந்தார்கள். அவர்களுடைய சாப்பாட்டுக்காகப் பெரிய பெரிய கல்லடுப்புகளில் ஜுவாலை வீசிய நெருப்பின் பேரில் பிரம்மாண்டமான தவலைகளில் கூட்டாஞ் சோறு பொங்கிக் கொண்டிருந்தது. சட்டிகளிலும் அண்டாக்களிலும் வெஞ்சனங்கள் வெந்து கொண்டிருந்தன. இவற்றிலிருந்து எழுந்த நறுமணம் அந்த வீரர்களின் நாவில் ஜலம் சுரக்கச் செய்தது. சோறு பொங்கி முடியும் வரையில் பொழுது போவதற்காக அவர்கள் ஆடல் பாடல் களியாட்டங்களில் ஈடுபட்டிருந்தார்கள். இச்சமயத்தில் அவர்களுடைய உள்ளங் கவர்ந்த அரசிளங் குமாரரும் வந்துவிடவே, அவ்வீரர்களின் குதூகலம் அளவுகடந்ததாயிற்று. அந்த எல்லைக் காவல் படையின் தளபதி மிகவும் சிரமப்பட்டு அவர்களுக்குள்ளே ஒழுங்கை நிலைநாட்டினர். எல்லாரையும் அமைதியுடன் பாதிமதியின் வடிவமான வட்டத்தில் வரிசையாக உட்காரும்படி செய்தார்.

பெரியதொரு ராட்சத மரத்தை வெட்டித் தள்ளி அதன் அடிப்பகுதியை மட்டும் பூமிக்கு மேலே சிறிது நீட்டிக் கொண்டிருக்கும்படி விட்டிருந்தார்கள். இளவரசர் வந்து அந்த அடிமரத்துச் சிம்மாதனத்தின் மீது அமர்ந்தார். இப்போது அவர் யானைப் பாகன் போல் உடை தரித்திருக்கவில்லை. தலையில் பொற் கிரீடமும், புஜங்களில் வாகுவலயங்களும், மார்பில் முத்து மாலைகளும் அணிந்து, அரையில் பட்டுப் பீதாம்பரம் தரித்து அமர்ந்திருந்தார். அவரைச் சுற்றி எல்லைக் காவல் தளபதியும் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் உட்கார்ந்திருந்தார்கள்.

இளவரசரை மகிழ்விப்பதற்காக ஏற்பாடு செய்திருந்த ஏலேல சிங்கன் சரித்திரக் கூத்து ஆரம்பமாயிற்று.

இந்தச் சமயம் சோழ வீரர்கள் இலங்கையில் பெரும் பகுதியைப் பிடித்திருந்தது போல் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னல் ஒரு தடவை தமிழ் வீரர்கள் ஈழ நாட்டைக் கைப்பற்றியிருந்தார்கள். அப்போது அத்தமிழ் வீரர்களின் தலைவனக விளங்கியவன் ஏலேல சிங்கன். அவனல் துரத்தப்பட்டு இலங்கை அரசன் சில காலம் மலைநாட்டில் போய் ஒளிந்திருந்தான். அவனுடைய இளம் புதல்வனின் பெயர் துஷ்டகமனு. இவன் பொல்லாத வீரன். இலங்கையைத் திரும்பவும் ஏலேல சிங்கனிடமிருந்து கைப்பற்ற வேண்டுமென்று நெடுங்காலம் கனவு கண்டான். அவ்வீரன் சிறுபிள்ளையா யிருந்த போது ஒரு நாள் படுக்கையில் கையையும் காலையும்



மடக்கி ஒடுக்கி வைத்துக் கொண்டு படுத்திருந்தான். அவனுடைய அன்னை, ''குழந்தாய்! ஏன் இப்படி உன்னை நீயே குறுக்கிக் கொண்டு படுத்திருக்கிறாய்? தாராளமாய்க் காலையும் கையையும் நீட்டி விட்டுப் படுத்துக் கொள்வதுதானே!'' என்றாள். அப்போது துஷ்டகமனு, ''தாயே! என்னை ஒரு பக்கத்தில் தமிழ் வீரர்கள் நெருக்குகிறார்கள்; மற்றொரு பக்கத்தில் கடல் நெருக்குகிறது. நான் என்ன செய்வேன்? அதனாலேயே உடம்பைக் குறுக்கிக் கொண்டு படுத்திருக்கிறேன்!'' என்றான்.



இத்தகைய வீரன் காளைப் பருவம் அடைந்த போது படை திரட்டிக் கொண்டு ஏலேல சிங்கனுடன் போருக்குச் சென்றான். அவன் கொண்டு போன படைகள் சின்னாபின்னமாகிச் சிதறி ஓடி விட்டன. அப்போது துஷ்டகமனு ஒரு யுக்தி செய்தான். ஏலேல சிங்கன் இருக்குமிடம் சென்று நேருக்கு நேர் நின்று, ''அரசே! தங்களுடைய பெரிய சைன்யத்துக்கு முன்னால் என்னுடைய சிறிய படை சிதறி ஓடி விட்டது. நான் ஒருவனே மிஞ்சியிருக்கிறேன். தாங்கள் சுத்த வீரர் குலத்தில் பிறந்தவர். ஆதலின் என்னுடன் தனித்து நின்று துவந்த யுத்தம் செய்யும்படி அழைக்கிறேன். நம்மில் வெற்றி அடைபவருக்கு இந்த இலங்கா ராஜ்யம் உரியதாகட்டும்; மற்றவருக்கு வீர சொர்க்கம் கிடைக்கட்டும்!'' என்று சொன்னான்.

துஷ்டகமனுவின் அத்தகைய துணிச்சலையும் வீரத்தையும் ஏலேல சிங்கன் மிக வியந்தான். ஆகையால் அவனுடன் தனித்து நின்று போர் செய்ய ஒப்புக் கொண்டான். இடையில் வந்து குறுக்கிட வேண்டாம் என்று தன் வீரர்களுக்குக் கண்டிப்பாகக் கட்டளையிட்டான். துவந்த யுத்தம் ஆரம்பமாயிற்று. இந்தச் செய்தியை அறிந்து சிதறி ஓடிய துஷ்டகமனுவின் வீரர்களும் திரும்பி வந்து சேர்ந்தார்கள். எல்லாரும் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நெடு நேரம் போர் நடந்தது. துஷ்டகமனுவோ தன்னுடைய பிறப்புரிமையைப் பெறும் பொருட்டு ஆத்திரத்துடன் சண்டையிட்டான். ஏலேல சிங்கன் அந்த இளைஞனிடம் அனுதாபம் கொண்டிருந்தபடியால் பூரண வலிவையும் பிரயோகித்துப் போர் செய்யவில்லை. ஆகையால் முடிவில் ஏலேல சிங்கன் இறந்தான். துஷ்டகமனு முடி சூடியதும், ஏலேல சிங்கன் இறந்த இடத்தில் அவனுக்குப் பள்ளிப் படைக் கோயில் எழுப்பி அவனுடைய வீரத்தையும் தயாளத்தையும் போற்றினான்.

இந்த அரிய சரித்திர நிகழ்ச்சியைச் சோழ வீரர்கள் இளங்கோ அருள்மொழிவர்மரின் முன்னிலையில் நடனக் கூத்தாக நடித்துக் காட்டினார்கள். ஆடலும் பாடலும் அமர்க்களப்பட்டன. ஏலேல சிங்கன் உயிர் துறந்து விழுந்த இடத்தில் நடித்த வீரன் உண்மையிலேயே செத்து விழுந்து விட்டானா என்று தோன்றும்படி அவ்வளவு தத்ரூபமாக நடித்தான். பார்த்துக் கொண்டிருந்த இளவரசரும் மற்ற வீரர்களும் அடிக்கடி 'ஆஹா'காரம் செய்து குதூகலித்தார்கள்.

நாடகம் நடந்து கொண்டிருந்த போது ஒரு முறை இளவரசர் ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, ''திருமலை! தம்பளை குகைக் கோயிலில் துஷ்டகமனுவுக்கும் ஏலேலசிங்கனுக்கும் நடந்த போர்க் காட்சியை அழியாத வர்ணச் சித்திரமாக வரைந்திருக்கிறதே, அந்தச் சித்திரத்தை நீங்கள் பார்த்தீர்களா?'' என்று கேட்டார்.

''இல்லை, ஐயா! தம்பளை வீதிகளில் நாங்கள் வந்து கொண்டிருந்த போதே தங்களைப் பார்த்து விட்டேன். குகைக் கோயிலுக்குள் போக நேரமில்லை'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஆகா! அந்த குகைக் கோயில்களிலே உள்ள சிற்பங்களையும் அவசியம் பார்க்க வேண்டும், திருமலை! நம் செந்தமிழ் நாட்டில் எவ்வளவோ சிற்ப சித்திரங்கள் இருக்கின்றன. அவற்றைக் காட்டிலும் மகத்தான அற்

புதங்கள் இந்த இலங்கைத் தீவில் இருக்கின்றன!'' என்றார் இளவரசர்.

''இளவரசே! இந்த நாட்டிலுள்ள சிற்ப சித்திரங்கள் எங்கும் போய்விட மாட்டா! எப்போது வேணுமானுலும் பார்த்துக் கொள்ளலாம். ஆனால் தங்களைப் பார்ப்பது அப்படியல்லவே? நல்ல சமயத்தில் நாங்கள் வந்ததினால் அல்லவோ பார்க்க முடிந்தது? எங்களுக்கு முன்னாலேயே இங்கு வந்த பார்த்திபேந்திர பல்லவன் தங்களைத் தேடிவிட்டு 'இங்கே இல்லை' என்று திரும்பிப் போய்க் கொண்டிருந்தான். வழியில் அவனை நாங்கள் பார்த்தோம்'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஆம்; என் தமையனாரின் அருமை நண்பர் வந்து தேடி விட்டுப் போனதாகத் தளபதிகூடச் சொன்னார். அவர் எதற்காக வந்திருப்பார் என்று உன்னால் ஊகித்துச் சொல்ல முடியுமா?''

''நிச்சயமாகவே சொல்ல முடியும். தங்களைக் காஞ்சிக்கு அழைத்து வரும்படியாக ஆதித்த கரிகாலர் அவரை அனுப்பி வைத்திருக்கிறார்.''

''அடடே! உனக்குத் தெரிந்திருக்கிறதே! இதோ உன் சிநேகிதன் இவ்வளவு பத்திரமாகக் கொண்டு வந்து ஒப்புவித்தானே, இந்த ஓலையில் என்ன எழுதி யிருக்கிறதென்றும் உனக்குத் தெரியும் போலிருக்கிறது?''

''தங்களை உடனே பழையாறைக்கு வந்து சேரும்படி தங்கள் தமக்கையார் எழுதி யிருக்கிறார்கள். இளவரசே! குந்தவை தேவி அந்தரங்கமாக இந்த ஓலையை எழுதி நம் வாணர்குல வீரரிடம் கொடுத்த போது பக்கத்திலிருந்த கொடி வீட்டில் மறைந்திருந்து நான் பார்த்துக் கொண்டிருந்தேன்....''

திருமலைக்குப் பின்னாலிருந்த வந்தியத்தேவன் அவனுடைய முதுகில் அழுத்தமாகக் கிள்ளினான்.

ஆழ்வார்க்கடியான் தன் முதுகில் ஓங்கி அறைந்து, ''இது பொல்லாத காடு; இரவு நேரத்திலேகூட வண்டு கடிக்கிறது!'' என்றான்.

இளவரசர் சற்றுக் கோபத்துடன், ''சேச்சே! இது என்ன வேலை? என் அருமைத் தமக்கையார் பேரிலேயே நீ உன் திறமையைக் காட்டத் தொடங்கி விட்டாயா?'' என்றார்.

''அதை நான் பார்த்திருந்தபடியினால்தான் இவனை இவ்வளவு பத்திரமாக இங்கே கொண்டு வந்து சேர்த்தேன். இளவரசே! இவன் வழியிலெங்கும் சங்கடத்தில் மாட்டிக் கொள்ளாமல் காப்பாற்றிக் கொண்டு வருவதற்கு நான் பட்ட பாட்டைப் புத்த பகவானே அறிவார். அநுராதபுரத்தின் வழியாக வந்திருந்தால் இவன் நிச்சயமாக இங்கு வந்து சேர்ந்திருக்க மாட்டான். வழியில் யாருடனாவது சண்டை பிடித்துச் செத்திருப்பான். அதனாலே காட்டு வழியாக அழைத்து வந்தேன். அங்கேயும் இவன் ஒரு மத யானையுடன் சண்டை பிடிக்கப் பார்த்தான். என்னுடைய கைத் தடியால் அந்த மத யானையைச் சம்ஹரித்து இவனைத் தங்களிடம் பத்திரமாய்க் கொண்டு வந்தேன்!'' என்றான்.

''ஓஹோ! அப்படியானால் இவனைப் பத்திரமாகக் கொண்டு வந்து என்னிடம் சேர்ப்பதற்காகவே நீ இலங்கைக்கு வந்தாயா, என்ன?''

''இல்லை, ஐயா! என் பங்குக்கு நானும் தங்களுக்கு ஒரு செய்தி கொண்டு வந்திருக்கிறேன்.''

''அது என்ன? சீக்கிரம் சொல்!'' என்றார் இளவரசர்.

''முதன் மந்திரி அநிருத்தர் தாங்கள் இலங்கையிலேயே இன்னும் சிறிது காலம் இருப்பது உசிதம் என்று சொல்லி அனுப்பியிருக்கிறார்.''

''இப்படி மூன்று மூத்தவர்கள் மூன்று விதமாகச் செய்தி அனுப்பினால் நான் எதை யென்று கேட்பது?'' என்றார் அருள்மொழி வர்மர்.

இச் சமயத்தில் வந்தியத் தேவன் குறுக்கிட்டு, ''இளவரசே! மன்னிக்க வேண்டும்! தாங்கள் கேட்க வேண்டியது தங்கள் தமக்கையாரின் வார்த்தையைத்தான்!'' என்றான்.

''ஏன் அவ்விதம் சொல்லுகிறீர்?''

''ஏனெனில், தங்கள் தமக்கையின் வார்த்தைக்கே மதிப்புக் கொடுக்க வேண்டும் என்று தங்கள் இருதயம் தங்களுக்குச் சொல்கிறது. அப்படித் தாங்கள் அவர் வார்த்தையைக் கேட்கா விட்டாலும், நான் கேட்டே தீர வேண்டும். தங்களை எப்படியும் அழைத்துக் கொண்டு வரும்படியாக இளைய பிராட்டி எனக்குப் பணித்திருக்கிறார்!'' என்றான் வந்தியத்தேவன்.

இளவரசர் வந்தியத்தேவனை ஏற இறங்கப் பார்த்து விட்டு, ''இத்தகைய ஒரு வீரத் தோழன் கிடைக்க வேண்டுமே என்று எத்தனையோ நாளாக நான் தவம் செய்து கொண்டிருந்தேன்!'' என்றார். (தொடரும்)



# ராமாயணம்

## ராஜாஜி

## 14. சீதா கல்யாணம்

மிதிலையில் ஜனக மகாராஜனுடைய யாகத்துக்காகச் சகல ஏற்பாடுகளும் செய்யப்பட்டு, பல வேறு தேசங்களிலிருந்து ரிஷிகளும் பிராமண சிரேஷ்டர்களும் வந்து சேர்ந்திருந்தார்கள். விசுவாமித்திரருக்கும் ராஜகுமாரர்களுக்கும் தகுந்த விடுதி கட்டப்பட்டு, அங்கே அவர்கள் தங்கினார்கள். ஜனகருடைய புரோகிதரான சதானந்தர் விசுவாமித்திர முனிவரை எதிர்கொண்டு உபசரித்தார். பிறகு ஜனகரே நேரில் வந்தார்.

''தாங்கள் என்னுடைய யாகத்துக்கு வந்தது என்னுடைய பெரும் பாக்கியம்'' என்றார் ஜனகர்.

''இந்த வாலிபர்கள் யார்? இவர்களைப் பார்த்தால் தேவலோகவாசிகளைப் போலிருக்கிறார்கள். ஆயுதங்களைத் தரிக்கும் தோரணையைப் பார்த்தால் தேர்ச்சியடைந்த வீரர்களாகக் காணப்படுகிறார்கள். இவர்கள் இருவரும் ஒரே சாயலாகவும் இருக்கிறார்கள். இவர்களைப் பெற்ற மகா பாக்கியவான் யார்?'' என்று ஜனகர் கேட்டார்.

விசுவாமித்திர முனிவர் அவர்கள் தசரத சக்கரவர்த்தியின் குமாரர்கள் என்பதையும், தாம் செய்த யாகத்தை அவர்கள் காத்து, அரக்கர்களை அழித்த விவரத்தையும் ஜனக மகாராஜனுக்குத் தெரிவித்தார்.

விருத்தாந்தம் எல்லாம் சொல்லி, ''மிதிலையிலுள்ள ருத்திர தனுசைப் பற்றிக் கேள்விப்பட்டு, தாங்கள் அனுமதித்தால் அதைப் பார்க்க வந்திருக்கிறார்கள்'' என்று பொருளை அடக்கி முனிவர் சொன்னதும் ஜனகர் அளவில்லாத மகிழ்ச்சி அடைந்தார்.

''வில்லைப் பார்க்க வந்திருக்கிற ராஜகுமாரன் வில்லைப் பார்க்கலாம். வில்லை வளைத்து நாண் ஏற்றினானாகில் என் மகளையும் பெறுவான். இந்த வில்லைப் பார்த்து அசைக்கவும் முடியாதென்று திரும்பிப் போன ராஜ குலத்தவர்கள் பலர். சரீர சம்பந்தமின்றித் தெய்விகமாய்த் தோன்றிய என் மகள் சீதையைத் தசரதருடைய மகன் அடைந்தானாகில் நான் மகிழ்வேன்'' என்றார் ஜனகர்.

வில்லைக் கொண்டு வரும்படியாக ஜனகர் தம் ஆட்களுக்கு உத்தரவிட்டார்.

வில்லானது ஓர் இரும்புப் பெட்டியில் பூஜை பந்தோபஸ்துடன் வைக்கப்பட்டிருந்ததை எட்டுச் சக்கரங்கள் கொண்ட வண்டியில் ஏற்றி, ஆயிரக் கணக்கான ஜனங்கள் சேர்ந்து உற்சவத் தேரை இழுத்து வருவது போல் இழுத்து வந்து சபா மண்டபத்தில் சேர்த்தார்கள்.

''இதோ, நானும் என் முன்னோரும் பூஜித்த மகாதேவனுடைய வில். ராஜகுமாரி சீதையை அடைய அதைப் பல அரசர்கள் வளைத்து நாண் ஏற்றப் பார்த்து முடியாமல் திரும்பிப்போயினர். இதைக் காண விரும்பும் தசரத குமாரனும் பார்க்கலாம்'' என்றார் ஜனகர்.

சபையில் இவ்வாறு ஜனகர் சொன்னதும், ''ராமசந்திரனே! பெட்டியைத் திறந்து, வில்லைப் பார்'' என்றார் விசுவாமித்திர முனிவர்.

குருவின் ஆணையைப் பெற்ற ராமன் இரும்புப் பெட்டியைத் திறந்து வில்லைப் பார்த்து விட்டு மிக விநயமாக, ''இந்தப் புண்ணிய தனுசை நான் தீண்டலாமா? எடுத்து நாண் ஏற்ற அனுமதி உண்டா?'' என்றான்.

ஜனகரும் விசுவாமித்திர முனிவரும், ''மங்களம் ஆகுக!'' என்றார்கள்.

சபையிலிருந்த அனைவரும் கண்களை மூடாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு பூமாலையை எடுப்பது போல் அவ்வில்லை விளையாட்டாக எடுத்தான் ராமன் !

**''......சீதை எனும் பூந் தோடலர்**
**கொம்பினைச் சூட்டிட நீட்டும்**
**ஏடவிழ் மாலை இதென்ன எடுத்தான்!''**

எடுத்து நிறுத்தித் தன் கால் கட்டை விரலால் தாக்குக் கொடுத்து வில்லை வளைத்து நாண் ஏற்றி விட்டான். பிறகு நாணைப் பிடித்துக் காது வரையில் இழுத்தான்.

**தடுத்(து) இமை யாமல்**
**இருந்தவர்தாளில்**
**மடுத்ததும் நாண்நுதி வைத்ததும்**
**நோக்கார்**
**கடுப்பினை* யாரும் அறிந்திலர்**
**கையால்**
**எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்!**



நாணை இழுத்த வேகத்தில் வில் வளைந்து வந்து திடீர் என்று இடி யோசையுடன் முறிந்தது. தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்.

''என் உயிரைவிடப் பிரியமான சிதையை ராமனுக்குத் தந்தேன்'' என்றார் ஜனகர்.

''மிக வேகமாகச் செல்லும் தூதர்களை அயோத்தியைக்கு அனுப்பித் தசரத மகாராஜனை அழைத்து வர உத்தரவு இடுவீராக'' என்றார் விசுவாமித்திர முனிவர்.

அப்படியே தூதர்கள் சென்றார்கள்.

* * *

ஜனக மகாராஜனுடைய தூதர்கள் மூன்று நாட்கள் வெகு வேகமாகப் பிரயாணம் செய்து, அயோத்தி போய்ச் சேர்ந்தார்கள். தேவராஜனைப் போல் சிம்மாசனத்தில் அமர்ந்திருந்த தசரத சக்கரவர்த்தியைக் கண்டு தூதர்கள், ''விசுவாமித்திர முனிவரும் ஜனக மகாராஜாவும் தங்களுக்கு நற்செய்தி அனுப்பியிருக்கிறார்கள். திருமகன் மிதிலைக்கு வந்தவன் சீதா சுயம்வரத்துக்கு அமைக்கப்பட்டிருந்த பரமசிவனார் வில்லை வளைத்து, நாணேற்றி, நாணை இழுத்து வில்லை ஒடித்தே விட்டான். சீதையைத் தங்கள் வீர குமாரன் ராமசந்திரனுக்குக் கொடுத்து விவாஹம் செய்யத் தங்கள் நல் வரவையும் ஜனக மகாராஜா எதிர்பார்க்கிறார். அனைவரும் உள்ளம் பூரித்து மகிழுமாறு தாங்களும் பரிவாரமும் உடனே மிதிலை செல்ல வேண்டும்'' என்று கூறினார்கள்.

பயந்து பயந்து ராஜகுமாரர்களை விசுவாமித்திர முனிவருடன் அனுப்பின தசரதனுக்கு இந்த விதமான சந்தோஷச் செய்தி வந்ததும் அவன் பரவசப்பட்டான் என்று சொல்லவும் வேண்டுமா ? உடனே மந்திரிகளுக்குச் சொல்லி எல்லா ஏற்பாடுகளும் செய்து, அடுத்த நாளே தசரதன் பரிவாரத்துடன் மிதிலைக்குப் புறப்பட்டான்.

தசரதன் சகல பரிவாரங்களுடனும் அரசர்க்குரிய ரத்தினாதி பரிசுகளுடனும்

* கடுப்பு : வேகம்.

மிதிலை போய்ச் சேர்ந்தான். ஜனகரும் தசரத சக்கரவர்த்தியும் சந்தித்து உபசாரங்கள் முடிந்ததும், "யாகம் சீக்கிரத்தில் முடியும். அது முடிந்தவுடனே இந்த விவாகத்தை நடத்திவிடுவது சிலாக்கியமாக எண்ணுகிறேன்" என்று ஜனக மகாராஜா தசரதனுக்குச் சொல்லிச் சம்மதம் கேட்டார்.

"பெண்ணைக் கொடுப்பவராகிய நீர் அல்லவோ செய்ய வேண்டியதற்கெல்லாம் அதிகாரி? நீர் சொல்லுகிறபடியெல்லாம் நடக்க வேண்டியது" என்றான் தசரதன்.

"இதோ என் மகள் சீதை, மகனே! நீ செல்லும் தரும நெறியில் இவள் உன்னுடன் துணையாகச் செல்வாள்; கையைப் பிடித்துப் பெற்றுக் கொள்வாய். மங்களம் ஆகுக. கற்பைக் காத்து மிக பாக்கியவதியாக உன் நிழலைப் போல் உன்னைப் பற்றி நிற்பாள். எப்போதும் விட்டுப் பிரிய மாட்டாள்."

**இயம்ஸீதா மம ஸுதா**
**ஸஹ தர்ம சரீ தவ**
**ப்ரதீச்ச சைனும் பத்ரம்தே**
**பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணினா**
**பதிவ்ரதா மஹா பாகா**
**சாயா இவானுகதா ஸதா**

வடநாட்டில் எல்லா விவாகங்களிலும் பெண்ணைக் கொடுக்கும்போது இந்தச் சீதா கல்யாண மந்திரத்தைச் சொல்லி வருகிறார்கள்.

இவ்வாறு ஜனகர் சீதையை ராமனிடம் ஒப்புவித்து விட்டார். சீதையும் சக்கரவர்த்தித் திருமகனும் பழைய பாற்கடல் காதலர்கள் அல்லவோ? பிரிந்தவர்கள் மறுபடியும் ஒன்றுகூடும் பெருமகிழ்ச்சியை அடைந்தார்கள். (தொடரும்)

## குமாரி கீதாவின் அரங்கேற்றம்



பரதநாட்டியம் பயின்று சென்ற மே மாதம் 25ந் தேதி தியாகராய நகர் வாணி மஹாலில் அரங்கம் ஏறிய குமாரி கீதா ராஜு, நடன ஆசிரியை ஸ்ரீமதி கௌசல்யாவின்சிஷ்யை, பிரபல டாக்டர் வி. ராஜுவின் புதல்வி. ஜதிஸ்வரம், சப்தம், தில்லானா போன்ற நிகழ்ச்சிகள் குமாரி கீதாவின் உழைப்பிற்கும் பயிற்சிக்கும் சான்று கூறின. வர்ணம் பரதநாட்டிய நிகழ்ச்சிகளில், அதிலும் சிறுமியர்களின் அரங்கேற்றங்களில் முக்கியமான அம்சம். ஆடுபவர்களுக்கும் பார்ப்பவர்களுக்கும் களிப்பூட்டுவது. சமீப காலங்களில் சம்பிரதாயமான வர்ணங்களுக்குப் பதில் கீர்த்தனைகளைக் கையாளும் முறை பரவி வருவதாகத் தெரிகிறது. குமாரி கீதாவின் அரங்கேற்றத்திலும் "காணக் கண் கோடி வேண்டும்" என்ற சிவன் கீர்த்தனை, வர்ணத்துக்குப் பதிலாகப் பணி புரிந்தது. இந்த மாற்றம் முன்னேற்றந்தானா என்பது நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. "நாதர் முடி மேல்" என்ற புன்னாகவராளிப் பாடல் சவுக்க காலத்தில் கையாளப்பட்டது, சர்ப்ப நடனத்துக்கு ஏற்றதாக அமைந்திருந்தது. பட்டம் பெற்ற பின்னரே கல்வி வளர வேண்டும் என்பது போல அரங்கேற்றத்துக்குப் பிறகுதான் நடனக் கலையின் நுட்பங்களைக் கற்றுத் தேற வேண்டுமாகையால் குமாரி கீதாவும் பயிற்சியைத் தொடர்ந்து மேற்கொள்வது நல்ல பயனைத் தரும்.




# லிப்டன்
# ஹிமாலயன்
# கோல்டன்
# டஸ்ட் டீ

பருகியவர் மீண்டும் மீண்டும் விரும்பிக்
கேட்கும் பானம்! கோப்பைக்குக்
கோப்பை திருப்தி தரும் சிறந்த மணம்!
தரம் நிறைந்த கெட்டியான பானம்!
பருகுவதில் இன்பம்! விலையிலும் சிக்கனம்!

ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் தூள் வகை
தேயிலைகளில் ஏற்றமிக்கது.




**லிப்டன் என்றாலே
நல்ல டீ**

LHGC-8 TAM

# அம்புலிக்கு அப்பால்... ⑩

கதை: புஷ்பா படம்: விஜயா

நுண்ணிய கருவிகளைக் கண்ட்ரோல் அறையில் சேதப்படுத்த நினைத்த இந்துவின் கரத்தை இறுகப் பற்றித் தடுத்தது முரளியின் கை!
















அதே நேரத்தில் 'புரொனாக் சர்க்கிள்' தலைமையகத்தில்
பாஸ்! ஒரு நல்ல செய்தி! கேப்கென்னடி-யிலிருந்து பச்சைக் கிரகத்தை நோக்கிச் செலுத்தப்பட்ட ராக்கெட்டும் நமது சதிச் செயல் காரணமாகப் பற்றி எரிந்து விட்டது!
வெரி குட்!...


உலக நாடுகள் அத்தனையும் செய்த முயற்சிகள் முறி-யடிக்கப்பட்டு விட்டன... சந்திரசேகர் போட்ட திட்டமும் பாழாகி விட்டது... அப்படித் தானே?
ஆமாம் பாஸ்!


எக்ஸ்! நீதான் இந்த அரிய சாதனையைச் செய்திருக்கிறாய். உனக்கு நான் ஒரு பரிசு கொடுக்கப் போகிறேன். இப்படி என் அருகில் வா!


எக்ஸ் நெருங்கி வந்ததும், தலைவனின் கையிலிருந்த மின்-சவுக்கு அவன் உடலை ஒரு முறை பதம் பார்த்தது!
சுளீர்
ஆ!


மடையா! எனக்கா விஷயம் தெரியாது என்று நினைத்தாய்? சந்திரசேகரிடம் உன் ஜம்பம் சாயவில்லையே! போ, எப்பாடு பட்டாவது அவரையும் அவரு-டைய உதவியாளர்களையும் தீர்த்துக் கட்டு....


...இந்த முயற்சியிலும் நீ தோற்றால் அப்போது இந்தச் சவுக்கு பேசாது; சிறுத்தை பேசும், ஜாக்கிரதை!
தொடரும்....


கோ-கே டால்க்
நாளும் கமழும் நறுமணம்-இதயம் துள்ளும் புது மணம்
கமழும் மென் மணம், 'கம்' மென்ற புதுமை
கோ-கே வாங்குவீர், பட்டென்ற மென்மை.
தொட்டு உறவாடும் உன்னத இன்பம்,
தூய மேனியில் புத்துணர்வு பொங்கும்.
குடும்பம் முழுமைக்கும் உகந்தது, சிக்கனம்,
கொண்டு செல்வீர் வீடு, கோ-கே டால்கம்.
ஹெலன் கர்டிஸ்
—லண்டன் . பாரிஸ் . நியூயார்க்
ஜே. கே. ஹெலன் கர்டிஸ் தயாரிப்பு.


Helene Curtis
Go Gay
TALC

(இருபது வருஷங்களில் நல்லசிவத்துக்கும் வெங்கிட்டுவுக்கும் நரை விழுந்திருப்பதுடன், பணத் தொந்தியும் விழுந்திருக்கிறது. பதவியை அவர்கள் பிடித்துக் கொண்டிருந்தாலும் அல்ப புத்தி அவர்களை விடவில்லை. நல்லசிவமும் வெங்கிட்டுவும் வந்ததும், இன்ஸ்பெக்டர் லாரன்ஸ், அவர்களை முன் பின் தெரியாதவர்போல வரவேற்கிறார்.)

**லாரன்ஸ்:** *வாங்க! நீங்க யாரோ?*

**வெங்கட்ராம்:** *வணக்கம். இவர்தான் திரு நல்லசிவம், எம். எல். ஏ.*

**லாரன்ஸ் (வியப்புடன்):** *எம். எம். ஏ.வா?*

**வெங்கட்ராம் :** *போட்டி யில்லாமல் தேர்ந்தெடுத்தாங்க. போட்டி போட்டவங்களை வாபஸ் வாங்கப் பண்ணிட்டோம்.*

**நல்லசிவம்:** *இவர்தான் வெங்கட்ராம்ஜி!*

**லாரன்ஸ்:** *வெங்கட்ராம்ஜியா? அதென்ன ஜி?*

**நல்லசிவம்:** *ஜி... அதுதான் இனிஷியல். அது தொடக்கத்திலே ஆரம்ப கட்டத்தில் இருந்தது. இப்போ இவர் வளர்ந்து பெரிய மனுஷரானதும் பின்னுடிப் போயிடுச்சு!*

**லாரன்ஸ்:** *நீங்க வந்த விஷயம்?*



# ஞான ஒளி

## கே. சுந்தரம்

**வெங்கட்ராம்:** *ஊருக்குப் புதுசா யாரா வது அதிகாரி வந்தால் நாங்கதான் முதல் மாலை போட்டு மரியாதை செய்யற வழக்கம்.*

**லாரன்ஸ்:** *தெரிஞ்ச விஷயம்.*

(நல்லசிவமும் வெங்கிட்டுவும் திகைக்கிறார்கள். பிறகு சமாளித்துக் கொண்டு, வழக்கம் போல் மாலை போட்டுச் சொற்பொழிவு செய்கிறார்கள். மாலையைத் திருப்பி அவர்களே எடுத்துப் போகாதபடி தம் மகனிடம் தருகிறார் லாரன்ஸ். அவ்விருவரும் அதைக் கண்டு மேலும் திகைத்து அசடு வழிகிறார்கள்.)

**லாரன்ஸ்** *(மாலையைச் சுட்டிக் காட்டி):* *இதுவும் தெரிஞ்ச விஷயம்தான்.*

(மாலையுடன் ஜார்ஜ் செல்கிறான்.)

**வெங்கட்ராம் :** *சார்! உங்க பெயரைக் கேட்டதும் இதே ஊரிலே இருபது வருஷத்துக்கு முந்தி இருந்த ஒரு இன்ஸ்பெக்டர் ஞாபகம் எங்களுக்கு வந்தது. அவன் பேரும் லாரன்ஸ்தான். ஆனா குணத்திலே உங்களுக்கு நேர் விரோதம். உங்களைப் பார்த்தால் தங்கமான மனுஷன்னு தெரியுதே.*

**நல்லசிவம்:** *அந்த லாரன்ஸைச் சின்ன வயசிலே அடைக்கலம் பாதிரியார் ரொம்பச் சிபாரிசு பண்ணினதாலே நாங்கதான் வளர்த்துப் படிக்க வைச்சு, போலீஸ்லே வேலைகூட வாங்கி வச்சோம்.*

**லாரன்ஸ்:** *அப்படியா?*

**வெங்கட்ராம் :** *அந்த லாரன்ஸ் என்ன செய்தான் தெரியுமா? அந்தோணிங்கற ஒரு நல்லவனுக்குக் குடிப் பழக்கத்தை ஏற்படுத்தி ஒரு நாள் தன்னுடைய விரோதி ஒருத்தனைக் கொலை பண்ண வைச்சுட்டான்!*

**நல்லசிவம்:** *அப்புறம் ஒரு நாள் 'உன்னைப் பாதிரியார் பார்க்கணும்னார்'னு கூப்பிட்டு நைஸா ஜெயிலுக்கு வெளியே அழைச்சுக்கிட்டு வந்து கொஞ்சம் பணத்தையும் கொடுத்துத் தப்பிக்க வைச்சுட்டான் சார்!*

**லாரன்ஸ் :** *அப்படியா? புதுக் கதையாயிருக்கே?*

**வெங்கட்ராம்:** *ஊரறிஞ்ச உண்மை சார்! (சிந்தித்தவாறு) நான் நினைக்கிறேன்... அந்தோணி ஓடியிருக்க மாட்டான். எங்கே தன்னைப் பற்றி வெளியிலே உண்மையைச் சொல்லி விடுவானோ என்று பயந்துக்கிட்டு லாரன்லே அந்த அந்தோணியைக் கொலை பண்ணி யிருப்பானோ...?*

(மேலே மேலே அவர்கள் புரளி செய்து சாடி விடுவதை எண்ணிக் குறும்பாக மெல்லச் சிரிக்கிறார் லாரன்ஸ்.)



"நீ... நீ... மேரிதானே..."

**லாரன்ஸ்:** இப்போ நான் என்ன நினைக்கிறேன், தெரியுமா?

**நல்லசிவம்:** உம்...?

**லாரன்ஸ்:** அந்த லாரன்ஸே...

**வெங்கட்ராம்:** உம், உம்...?

**லாரன்ஸ்:** இப்போ இங்கே வந்து...

**நல்லசிவம்:** உம்... வந்து?

**லாரன்ஸ்:** உங்க இரண்டு பேருக்கும் நல்ல பாடம் கற்பிக்கப் போறேன்! ஏன்னா அந்தப் பழைய இன்ஸ்பெக்டர் லாரன்ஸ் நானே தான்!

(அந்த இருவரும் கொஞ்சமும் அயராமல் சமாளித்து அவரிடம் சிரித்துப் பேசுகிறார்கள்.)

**வெங்கட்ராம்:** தெரியுமே! நல்லாத் தெரியும்!

**நல்லசிவம்:** இப்படியெல்லாம் கதையைத் தலைகீழாக மாற்றிச் சொன்னால்தான் நீங்க பழைய லாரன்ஸுன்னு ஒப்புக் கொள்வீங்கன்னு எங்களுக்குத் தெரியுமே. அதனால் தான் நாடகமாடினோம்! ஆமா ஊரெல்லாம் எப்படி இருக்கு? ரொம்ப மாறிப் போயிருக்குமே? (லாரன்ஸின் வழுக்கைத் தலையைப் பார்த்தபடி) முன்னே அடர்ந்த புல்வெளியா இருந்த இடமெல்லாம்...

**வெங்கட்ராம்:** இப்ப பொட்டலாப் போச்சு!

**லாரன்ஸ்** (தலையைத் தடவியபடி): கவனிச்சேன். அடைக்கலம் பாதிரியார் கண்ட கனவுப்படி பிரம்மாண்டமான மாற்றங்கள் தான் ஏற்பட்டிருக்கின்றன இந்த ஊரிலே.

**நல்லசிவம்:** ம்...அவர் ஆசையை உள்ளூர் ஆள் யாரும் நிறைவேற்ற முடியலே. பர்மாக்காரர் ஒருத்தர் ...நம்ம பக்கத்து ஆள்தான். பல வருஷம் அங்கே போய் வியாபாரம் செஞ்சு கோடீசுவரனாகிவிட்டதாகப் பேசிக்கிறாங்க. ரெண்டு வருஷம் முந்தி இங்கே வந்தார். அப்புறம் அடிக்கடி வந்து போய்க்கிட்டு இருக்கார். அவர்தான் லட்சக் கணக்கிலே செலவு செய்து, ஆஸ்பத்திரி, அனாதை விடுதி எல்லாம் கட்டினார்.

**வெங்கட்ராம்:** அதற்குப் பதிலா அவர் வேறு எதையும் கேட்கலே. பாதிரி அடைக்கலம் உபயோகப்படுத்தின பழைய சாய்வு நாற்காலி ஒன்றை மட்டும் தமக்காக வாங்கிக்கிட்டார்.

**லாரன்ஸ்** (ஆர்வத்துடன்): அவர் பேரு?

**வெங்கட்ராம்:** அருணானந்தர்! எல்லாரும் செல்லமாக, 'அருண்' 'அருண்' அப்பான்னு தான் கூப்பிடுவோம். அவர் போட்டிருக்கறது கோட்டும் சூட்டும்னுக்கூட எப்

போதும் சாமியார் மாதிரி தத்துவந்தான் பேசுவார். கண்ணுக்கு ராத்திரியானாலும் சரி, பகலானாலும் சரி கறுப்புக் கண்ணாடி போட்டிருப்பார்.

**லாரன்ஸ்:** ஐ ஸீ! நான் அவரைப் பார்க்கணுமே!

**வெங்கட்ராம்:** ஏன் சார்?

**லாரன்ஸ்:** ஊருக்குப் பெரிய மனுஷனுச்சே. ஒரு போலீஸ் அதிகாரி தெரிஞ்சுக்காமல் இருக்கலாமா?

(அப்போது அவர் மகன் ஜார்ஜ் வருகிறான்.)

**ஜார்ஜ்:** அப்பா! யாரோ கான்வெண்ட் ஸ்கூல் மேச்சராம். ஏதோ விழாவுக்கு லைசென்ஸ் விஷயமா உங்களைப் பார்க்க வந்திருக்காங்க.

**லாரன்ஸ்:** வரச்சொல்லு...

(மேரி தன் மகளுடன் நுழைய, அவளைப் பார்த்த லாரன்ஸ் திடுக்கிடுகிறார்.)

**லாரன்ஸ்:** நீ....நீ மேரிதானே?

**மேரி** (குழப்பத்துடன்): நீங்க....?

**லாரன்ஸ்:** நான்தாம்மா லாரன்ஸ். இன்ஸ்பெக்டர் லாரன்ஸ். மேரி! எப்படி இருந்த நீ இப்போ இப்படி உருக்குலைஞ்சு போயிட்டியே...? சே! அந்தோணி இருந்தா உன்னை இந்த நிலையில் பார்க்கப் பொறுப்பானா?

**மேரி:** அவர் இருந்தால் நீங்க மட்டும் அவரைப் பார்த்துட்டுப் பொறுமையா வெளியே விட்டு வைப்பீங்களா?

**லாரன்ஸ்:** நான் இந்த நிமிஷத்திலே வெறும் லாரன்ஸ். நீ கேக்க வேண்டிய அந்தக் கேள்வி இன்ஸ்பெக்டர் லாரன்ஸ் கிட்டே. ... நீ எப்படி இருக்கே மேரி?

**மேரி:** உயிரோடு இருக்கேனேன்னு ஆச்சரியப்படறீங்களா? முன்னே – பாதிரியார் அடைக்கலம் உயிரோடு இருந்தபோது யார் வந்தாலும் மாதா கோயிலைப் பற்றி ஒரு புதிர் போடுவாரே ஞாபகமிருக்கா?

**லாரன்ஸ்:** ஆமாம். 'ஆரம்பம்தான் முடிவு; முடிவுதான் ஆரம்பம். நீ நடுவில் இருக்கிறாய்! You are in the middle. அது என்ன?'

**மேரி:** 'சர்ச்' என்பதுதானே புதிருக்கு விடை? அதுதான் என் வாழ்க்கையிலேயும் நடந்தது.

மாதா கோயில்லே மணி அடிக்கிறவன் மகளாப் பிறந்து அங்கேயே வளர்ந்து,

"ம்.. கல்யாணம் செஞ்சு வைக்கறதிலே எப்பவுமே உங்களுக்கு அவசரந்தானே..!"






இடையிலே அதை விட்டுப் பிரிஞ்சாலும் இப்போ கடைசியிலே அதே சர்ச்சிலே தான் — அதையொட்டியுள்ள கான்வென்ட் ஸ்கூல் டீச்சரா — ஒரு வருஷமா இருக்கேன்.

**லாரன்ஸ்** *(அவளருகே நின்ற பெண்ணைச் சுட்டிக் காட்டி)*: இது யார் மேரி?

**மேரி:** இவள்தான் என் மகள் ராணி! நர்ஸாக விளங்கப் பயிற்சி பெற்றுப் படிக்கிறாள்!

**லாரன்ஸ்:** வெரி குட்... *(தன் மகனை அறிமுகம் செய்து)* இவன்தான் என் மகன் அடைக்கலம் ஜார்ஜ். வேலூரிலே சப்—இன்ஸ் பெக்டராகப் பயிற்சி பெற்று வருகிறான்.

**மேரி:** ம்... புலிக்குப் பிறந்தது பின்னே என்ன, பூனையாவா போயிடும்?

**லாரன்ஸ் :** அந்தோணிக்குப் பிறந்ததே அசடாப் போயிட்டபோது, புலி என்னம்மா —ரொம்பச் சாதாரணம். *(அவள் திடுக்கிட்டுக் கலங்குவது கண்டு)* மன்னிச்சுடு மேரி! உன்னைப் பார்க்கும்போது என் மனசிலே ஓர் உறுத்தல்... ஒரு விதத்திலே உன் வாழ்க்கை பாழானதுக்கு நான்தான் காரணம். ஏன்னு உன் கல்யாணத்தை நான் தானே செஞ்சு வச்சேன்?

**மேரி:** சே...சே... நான் கொடுத்து வைச்சது அவ்வளவுதான். அதுக்கு நீங்களா பொறுப்பாளி?

**லாரன்ஸ்:** மேரி...! உன்னைப் பார்த்த உடனே ஏதோ ஒரு வேகத்திலே பேசுகிறதா நினைக்காதே! லாரன்ஸும் அந்தோணியும் ஒருத்தொருக்கொருத்தர் உயிர்த் தோழர்கள். சந்தர்ப்பச் சூழ்நிலையாலே பிரிஞ்சாக்கூட, எங்க அன்போ, உறவோ அறுந்துபோகக் கூடாது. போகவும் முடியாது. ஆனால்...

இன்ஸ்பெக்டரா நான் அவனை என்றைக் காவது பிடிச்சுத்தான் ஆகணும். அவனும் தண்டனையை அனுபவிச்சே தீரணும். ஆனால் இந்த என்னுடைய கடமை புணர்வாலே, எங்க பிணைப்பு அறுந்து போகக் கூடாதம்மா!

அட வாழ்விலே ஒண்ணு சேரலேன்னாலும் வயசாயிடுச்சே! சாவிலே யாவது ஒண்ணு சேர்ந்துடுவோம்.

*(கண் கலங்குகிறார்.)*

**மேரி :** அழறீங்களா ?

**லாரன்ஸ்:** அவனும் நானும் அந்தக் காலத்திலே சின்னப் பிள்ளைங்களா இருந்தபோது விளையாடுவோம். என்ன விளையாட்டுத் தெரியுமா? போலீஸ் — திருடன் விளையாட்டு! அப்போதெல்லாம் நான் தான் திருடன்! அவன் என்னைத் தேடிப் பிடிப்பான். ஆனால் நிஜ வாழ்க்கையிலே அவனைத் தேடிப் பிடிக்க நான் முயற்சி பண்ணிக்கிட்டிருக்கேன்!

நான் கவண் அடிச்சுக் குருவியைப் பிடிப்பேன். அவன் அந்தக் குருவிக்கு முதலுதவி செய்து என்கிட்டேயிருந்து தப்ப வைப்பான். ஆனால் இப்போ அவனே தப்பிப் பறந்தோடும்படியாயிடுச்சு!

**மேரி:** மன்னிச்சுடுங்க. இறந்த கால வாழ்க்கையை நினைச்சு அழுதழுது ஓய்ஞ்சுட்டேன். என்னைப் பெற்றவர் வாழ்க்கை முழுவதும் கடுகளவு அமைதிகூட இல்லாமல் போயிட்டாரேன்னு நினைச்சு அழுது அழுது கண்ணீர் வற்றிடுச்சு!

**லாரன்ஸ்:** மேரி! வறண்டுபோன உன் வாழ்விலே உன் மகள் மூலமாவது வளம் பெருகணும்! புன்னகைன்னு எப்படி இருக்கும் என்கிறதைக்கூட நீ மறந்துபோயிருப்பே; நீ மறுபடியும் சிரிச்சு நான் பார்க்கணும்மா. அதனாலே... நான் என்ன சொல்றேன்னு... சம்பந்தம் பேச என்னை விடப் பெரியவங்க என் வீட்டிலே வேறே யாரும் இல்லே...

**மேரி:** சம்பந்தமா?

**லாரன்ஸ்:** ஆமாம் மேரி! என் மகன் ஜார்ஜுக்கு உன் பெண் ராணியைக் கல்யாணம் செஞ்சு கொடுப்பாயா? *(படபடப்புடன்)* ஏம்மா தயங்கறே! உனக்கு விருப்பமில்லையா?

**மேரி:** நீங்க சொல்லி நான் மறுக்க முடியுமா?

**லாரன்ஸ்:** வெரி குட். என்ன செய்வியோ எனக்குத் தெரியாது. இன்னும் பதினைஞ்சே நாளில் இவங்க கல்யாணம் நடந்தே தீரணும்!

**மேரி** *(குத்தலாக)* **:** ம்... கல்யாணம் செஞ்சு வைக்கிறதிலே எப்பவுமே உங்களுக்கு அவசரம்தானே!

**லாரன்ஸ்** *(வேதனைத் துடிப்புடன்)*: இந்தக் கல்யாணத்தை நீயே செய்து வைச்சுடு மேரி! ஏன்னு உனக்குத்தான் தெரியுமே! என் கை ராசியில்லேன்னுட்டு..... **(தொடரும்)**



மைகளும் இவருக்கு முன்னால் கனடாவுக்குச் சென்று விட்டன!

மகாராஷ்டிர அரசாங்கம் நடத்தும் பொம்மை வகுப்பில் சேர்ந்து தேர்ச்சி பெற்ற அகிலா சங்கர் சென்னைக்கு வந்ததும், ஜப்பான் பாணியில் பொம்மைகள் செய்யும் முறையைக் கோவிந்தம்மா என்பவரிடம் கற்றுக் கொண்டார். கல்லாதது உலகளவு அல்லவா?

தஞ்சை மண்ணில் நீடாமங்கலத்தில் பிறந்த ஸ்ரீமதி அகிலா சங்கர், ''முருகா, நாராயணா இன்று நல்ல காரியங்கள் செய்ய வேண்டும்'' என்று பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டேதான் படுக்கையிலிருந்து எழுந்திருப்பாராம். ''இன்று யாருக்கு என்ன உதவி செய்தோம்?'' என்று ஒரு முறை நினைத்துப் பார்த்துவிட்டுத்தான் இரவு படுக்கைக்குப் போவாராம்!

இவருடைய கணவர் திரு சங்கரன் இந்தியன் ஏர்லைன்ஸில் ஜூனியர் ஃப்ளீட் ஆப்பரேஷன் ஆபீஸராகப் பணியாற்றுகிறார்.

- ☐ ஜெனிவாவில் தமிழ்
- ☐ கனடாவில் பொம்மைகள்
- ☐ பம்பாயில் சங்கீதப் பள்ளி
- ☐ சென்னையில் கிண்டல்!



# அலை அலையாகக்

''நாச வேலைக்கு அணுசக்தியைப் பயன்படுத்தக் கூடாது'' என்பது குறித்து ஜெனிவாவில் நடந்த அகில உலகத் தாய்மார்கள் மாநாட்டில் தமிழில் பேசிய ஒரே பெண்மணி யார் தெரியுமா? அவர்தான் ஸ்ரீமதி அகிலா சங்கர். இவர் தமிழில் பேசியவுடன் அதை ஏழு மொழிகளில் மொழிபெயர்த்தார்கள்.

செக்கோஸ்லொவேக்கியா, ஜெர்மனி, இத்தாலி ஆகிய நாடுகளுக்குச் சென்றிருக்கும் இவருக்குக் கனடாவிலிருந்தும் அழைப்பு வந்திருக்கிறது.

கைவண்ணமும், கலை வண்ணமும் நிறைந்த பொம்மைகள் செய்வதில் இவர் வல்லவர். பலருக்குப் பொம்மைகள் செய்யக் கற்றுக் கொடுக்கத்தான் கனடா செல்கிறார். அங்கு நடக்கவிருக்கும் அகில உலகப் பொம்மைகள் கண்காட்சிக்கு இவர் தயாரித்த பல பொம்மைகள் ஏற்கனவே சென்றுவிட்டன. பரத நாட்டிய உடையில் உள்ள பொம்மைகளும், இந்தியப் பண்பாட்டைப் பிரதிபலிக்கும் வகையில் ஆடை அலங்காரங்கள் பூண்டு உள்ள பல்வேறு மாகாணத்தைச் சேர்ந்த பொம்

பதின்மூன்று வருடங்கள் பம்பாயில் இருந்துவிட்டுக் கணவருக்கு வேலை மாற்றம் காரணமாகச் சென்னைக்கு வந்திருக்கும் இவர் பத்தாயிரத்தில் ஒருவர்! எப்படித் தெரியுமா? ''புதுமையான ஒரு பதார்த்தம் செய்ய வேண்டும். மணம், ருசி, பரிமாறும் முறை எல்லாம் இந்தத் தின்பண்டத்தைப் பொறுத்த வரை புதுமையாக இருக்க வேண்டும்—முயன்று பாருங்கள்'' என்று சொல்லி 'ஈவ்ஸ் வீக்லி' பத்திரிகை ஒரு போட்டி நடத்தியது. பத்தாயிரம் பேர்கள் கலந்துகொண்டார்கள். பரிசு பெற்றவர் அகிலா சங்கர் மட்டுமே! குறிப்பிட்ட புதுமையான பதார்த்தத்தை எப்படிப் பரிமாற வேண்டும்; பரிமாறும் பொழுது, நாற்காலி, மேஜை, அதன்மேல் விரிக்கப்படும் துணி இவை என்ன நிறத்தில் இருக்க வேண்டும், பரிமாறும்போது எந்தப் பாத்திரத்தில் எடுத்துப் பரிமாற வேண்டும், பரிமாறும் நபர் என்ன உடையில் தோன்ற வேண்டும் போன்ற விவரங்களை அழகாகக் கலைநயத்தோடு எழுதியிருந்ததால் 'ஈவ்ஸ் வீக்லி'யின் பரிசு இவருக்குக் கிடைத்தது.

பெமினா — ஈவ்ஸ் வீக்லி ஆகிய பத்திரிகைகளில் பல கட்டுரைகள் எழுதி யிருக்கும்

ஸ்ரீமதி அகிலா சங்கர் புகைப்படக் கலையிலும் ஆர்வமுள்ளவர்.

சென்னைக்கருகே சோழவரத்தில் ஆண்டு தோறும் நடக்கும் கார் பந்தயம் இவருக்குப் பிரமிப்பைத் தருவதில்லை. காரணம்: இவரே மிக வேகமாகக் கார் ஓட்டுவார்.

ஆனால் இதையெல்லாம் விட இவருக்கு ரொம்பப் பிடித்தமானது சங்கீதம். சங்கீதத்தில் இருபது வருட அநுபவம் பெற்ற இவர், தம்முடைய ஏழாவது வயதில் பர்மாவில்



# கலை!

பாடியிருக்கிறார். இவருக்கு இவருடைய தாயார் குரு. நாற்பது மாணவிகளுக்கு இவர் குரு. பம்பாயில் சங்கீதப் பள்ளி நடத்தி வந்த ஸ்ரீமதி அகிலா சங்கர் இப்பொழுது சென்னை — அசோக் நகரில் தொடர்ந்து சங்கீதம் கற்றுத் தருகிறார்.

ஆண்டுதோறும் தியாகராஜ ஆராதனையின்பொழுது பஞ்சரத்னக் கீர்த்தனைக்காக நடக்கும் போட்டியில் சிறந்த முறையில் பாடுபவர்களுக்குத் தங்கப் பதக்கம் பரிசாகத் தருகிறார். மாம்பலம் ஸ்திரீ சேவா மந்திர் குழந்தைகளுக்கு வாரம் ஒரு முறை பக்திப் பாடல்களை இலவசமாகச் சொல்லிக் கொடுக்கிறார். மேற்கு மாம்பலம் மாதர் சங்கத்திலும் சங்கீதம் சொல்லிக் கொடுக்கிறார். வானொலியில் நிறையப் பாடியிருக்கிறார்.

சங்கீதம், சமையல் கலை, தையல் கலை, தோட்ட வேலை, பிரம்பு வேலை, எம்பிராயடரி, பின்னல் வேலை இவற்றில் நல்ல தேர்ச்சி பெற்ற இவரை நண்பர்கள், "ஏண்டியம்மா, நடமாடும் கலைக் கல்லூரி! சௌக்கியமா?" என்றுதான் குசலம் விசாரிப்பார்கள். கிண்டலில் அன்பும் கலந்திருப்பதால் அகிலா அதைப் பொருட்படுத்துவதில்லை; வரவேற்கிறார்!

வயலின் வாசிப்பார்; ஜலதரங்கத்தை ஜமாய்ப்பார்; புல்லாங்குழல் இசைப்பார். இதோடு நின்றுவிடாமல் மேல் நாட்டு இசைக் கருவிகளான மேண்டலின், அகார்டியன் பியானோ, டபுள் பேஸ், ஆமன் ஆர்கன் ஆகியவற்றையும் ஒருகை பார்ப்பார்!

போதாக் குறைக்குக் கதாகாலட்சேபம் வேறு சிறப்பாகச் செய்து 'பஜன காருண்ருத்' பட்டம் பெற்றுள்ளார்! இவருக்கு ஆசைக்கு ஒரு பெண் இல்லையானாலும் ஆஸ்திக்கு இருவர் உண்டு.

இவருக்குப் பிடித்தது சமூக சேவை; பிடிக்காதது : பகல் தூக்கம்; அரட்டை அடிப்பது. ஒன்றன்பின் ஒன்றாகப் பொங்கி வரும் கடல் அலைகளைப்போல் பல கலைகளில் தேர்ச்சி பெற்றுள்ள அகிலா, "உங்களிடம் புத்தி கூர்மை இல்லை என்றால் காரியதரிசியிடமிருந்து கடன் வாங்கிக் கொள்ளலாம். ஆனால் நேர்மை இல்லையென்றால் கடவுள் கூட உதவி செய்ய மாட்டார்" என்று தம்மிடம் கலை பயில வரும் மாணவிகளிடம் அடிக்கடி கூறுகிறார்.

படங்களும் கட்டுரையும் — அன்பு







மகாநாட்டை விளக்கேற்றி வைத்துத் தொடங்கி வைக்கிறார் உயர் திரு வி. வி. கிரி. அருகே பொதுச் செயலாளர் திரு பன்னீர் செல்வம். பின்னால் நிகழ்காலத்திய தலைவர் திரு வேம்பு.

# ஏமாற்றம் அளிக்காத எழுத்தாளர் மகாநாடு!

அண்மையில் நடந்த தமிழ் எழுத்தாளர் சங்க மாநாடு எழுத்தாளர்களில் யாருக்குமே ஏமாற்றம் அளிக்கவில்லை என்றால் அது நூற்றுக்கு நூறு உண்மை! "குடியரசுத் தலைவரே வந்திருந்து தொடங்கி வைத்த மகத்தான விழாவாக மாநாடு நடந்தேறிவிட்டது; இம்மியளவும் ஏமாற்றமில்லை" என்று பலர் சொல்லிக் கொண்டார்கள். வேறு பல எழுத்தாளர்கள், "ராஷ்டிரபதியே வந்து விட்டார் என்றால் என்னய்யா? ஏமாந்து விடுவோமா? நான் இந்தத் தமிழ் எழுத்தாளர் சங்க அங்கத்தினனே அல்ல; தெரியுமா?" என்று கேட்டார்கள். ஆகக்கூடி, யாருக்குமே ஏமாற்றம்அளிக்காத சிறப்புடன் எழுத்தாளர் விழா நாலு நாள் கல்யாணமாக ஜாம் ஜாம் என்று நடந்தேறியது!

## 1. தொடக்க விழா

அவை நிறைந்திருந்தும் ஆரவாரம் ஏதும் இல்லை. அமைதி பரவிக் கிடக்கிறது. ஆம்! தாற்காலிக பாரத ராஷ்டிரபதி வி. வி. கிரி அவர்கள் பங்குபெறும் விழாவல்லவா?

பார்வையாளர்கள், பந்தோபஸ்துப் பணி புரிகிறவர்கள், 'பாட்ஜு'களைச் சட்டையிலும் பரபரப்பை முகத்திலும் மாட்டிக் கொண்டு நிற்கும் சங்கத்தின் நிரந்தர, தாற்காலிக நிர்வாகிகள் அனைவரும் விழாக் கோலத்துக்குக் களையூட்டுகின்றனர்.

ராஜாஜி மண்டபத்தில் மாட்டப்பட்டிருக்கும் கண்ணாடி விளக்குச் சரங்கள் காற்றிலே அசைந்து அசைந்து இனிய ஓசையை அவ்வப்போது பரப்புகின்றன.

"இங்கே வாங்க! உங்களுக்கு இடம் பிடித்து வைத்திருக்கிறேன்" என்று அழைக்கிறார் நண்பர் பால குருநாதன். விவேகாநந்தா கல்லூரியில் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றும் எழுத்தாள அன்பர். கருத்துப் பரிமாறிக் கொள்ளப் பழகிய நண்பர் இருக்கிறார் என்ற மகிழ்ச்சியுடன் அவர் பக்கத்து இருக்கையை ஆக்கிரமித்துக் கொள்கிறேன்.

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பதினாறாவது ஆண்டு விழா குறட்பாக்களைக் கொண்ட இறை வணக்கத்துடன் கணீரென்று ஆரம்பமாகிறது.

வரவேற்புக் குழுத் தலைவர் ஏ. வி. மெய்யப்பனின் சார்பில் அவர் குமாரர் முருகன் சுருக்கமாக வரவேற்புரையை முடித்துக் கொள்கிறார். தொடர்ந்து மாநாட்டுத் தலைவர் ந. சஞ்சீவி தலைமை உரை ஆற்றுகிறார். உலகத்து இலக்கியங்கள் அனைத்தையும் தமிழ்மொழியில் கொண்டு வர வேண்டும் என்ற அவரது கருத்து மறுத்துக் கூற ஏதுமில்லாத பழைய யோசனையாகவும், சர்வகலாசாலை தமிழ்ப் பட்டப் படிப்புக்கு இன்றைய மறுமலர்ச்சி எழுத்தையும் பாடமாக்க வேண்டும் என்ற இரண்டாவது



சிலம்புச் செல்வர் கேடயம் பெறுகிறார்.

கருத்து வரவேற்கத்தக்க புதிய யோசனை யாகவும் விளங்குகிறது.

முன்பெல்லாம் இரண்டு கேடயங்கள், இரண்டு பதக்கங்கள் வழங்குவார்கள். இந்த ஆண்டு மூன்று மூன்றாக வழங்கு கிறார்கள். தமிழுக்கு நேரடியாகத் தொண்டு செய்ததற்காக, காலஞ்சென்ற முதலமைச்சர் அண்ணாதுரை, கலைமகள் ஆசிரியர் கி. வா. ஜ., ம. பொ. சி. ஆகிய மூவருக்குக் கேடயங்களும், பிற மொழியின் வாயிலாகத் தமிழ் மணம் பரப்பித் தொண்டு செய்ததற்காக ராமானுஜன் (ஆங்கிலம்) திருமதி ஹெல்கா ஆன்டோன் (ஜெர்மானிய மொழி) ஸ்ரீராம தேசிகன் (சம்ஸ்கிருதம்) ஆகிய மூவருக்குப் பதக்கங்களும் குடியரசுத் தலைவரால் வழங்கப்படுகின்றன.

ஸ்ரீமதி ராணி அண்ணாதுரை அம்மையார் கேடயத்தைப் பெற்றுத் திரும்பும் போது அவர் கண்களில் மட்டுமின்றி அவையோர் கண்களிலும் ஈரம் படர்கிறது.

பேராசிரியர் ராமாநுஜன் சிகாகோ சர்வகலாசாலையில் பணியாற்றிக் கொண்டிருப்பதால் அவருக்கான பதக்கத்தைச் சென்னையிலுள்ள அமெரிக்கன் கான்ஸல் ஜெனரல் தாமஸ், எம். ரெக்னகல் பெற்றுக் கொள்கிறார். பாராட்டுக்கான நன்றி உரையையும் அவரே வழங்குகிறார். திருமதி ஹெல்கா ஆன்டோன் தமிழிலே நன்றி நவின்று கரகோஷம் பெறுகிறார். ஸ்ரீராமதேசிகன் பேச வந்து வழி தவறி எங்கோ போக முயன்றதால் நிர்வாகிகள் பின்னால் வந்து அவர் காதைக் கடிக்க வேண்டியதாகிறது.

''அவரைப் பேச விடாமல் ஏன் இப்படி....?'' என்கிறார் பாலகுருநாதன்.

''அரசியல்வாதிக்குத்தான் பேச்சை எந்தத் திசையிலும் மாற்ற உரிமையுண்டு. ஓர் இலக்கிய கர்த்தாவுக்கு அந்த உரிமையைத் தர யாரும் தயாராக இல்லை. வடமொழி என்ற சொல் வியாக்கியானத்துக்கு இவர் வகுப்பு நடத்த ஆரம்பிக்கிறாரே!'' என்கிறேன் நான்.

ஸ்ரீராமதேசிகன் சொல்ல நினைத்ததைச் சொல்லி விட்டுத்தான் உட்காருகிறார். கி. வா. ஜ. அவர்கள் இரண்டு நிமிடங்களிலும் ம. பொ. சி. அவர்கள் இரண்டு பழைய நிகழ்ச்சிகளை நினைவு படுத்தியும் தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறார்கள்.



குடியரசுத் தலைவரும்
மாநாட்டுத் தலைவரும்

ஜனாதிபதி அவர்கள் உரையாற்ற, தம் ஆசனத்திலிருந்து சற்றுத் தள்ளியிருக்கும் ஒலி பெருக்கி முன் வந்து நிற்கிறார். ஆங்கிலத்தில் உரை ஆரம்பமாகிறது.

நமது நண்பரும் தமிழ் எழுத்தாளர் சங்கத்தைத் தோற்றுவித்தவருமான அமரர் கல்கி அவர்களுக்குப் புகழாஞ்சலி செலுத்துகிறார். எளிய தமிழானாலும் வன்மையான தமிழை அவர் கையாண்ட திறனை நினைவுகூர்ந்து மகிழ்கிறார். அடுத்து சிறந்த எழுத்தாளர்களான திரு அண்ணாதுரை திரு கருணாநிதி ஆகியோருக்கு முதல் அமைச்சர் பதவி தந்ததன் மூலம் தமிழ் மக்கள் எழுத்தாளர்களை எந்த அளவுக்குப் போற்றுகிறார்கள் என்பது தெளிவாகிறது என்கிறார். இதையெல்லாம் கேட்டுப் பெருமிதமடையும் அவையோர், 'எழுத்தாளர் சங்கமும் ஒரு வகையில் தொழிற் சங்க ரீதியில்தான் இயங்குகிறது' என்று பொருள் படும்படி கிரி அவர்கள் பேசியதும், ''அதெப்படி சரியாகும்? தமிழ் எழுத்தாளர் சங்கம் ஒரு நாளும் அந்த வகையில் பாடுபட வில்லையே?'' என்று யோசிக்கத் தொடங்குகிறார்கள்.

''அவரை விழாவுக்கு அழைத்த நிர்வாகிகள் அவசரத்தில் எதையாவது சொல்லி வைத்திருப்பார்கள். அந்த வகையில் அவர் சிந்தனை போயி

திரு கி. வா. ஜகந்நாதன் அவர்களுக்குப் பாரதியின் உருவம் பொறிக்கப்பட்டுள்ள கேடயம் வழங்குகிறார் நம் பாரத ராஷ்டிரபதி.

ருக்கும் ! அது போகட்டும். ஒரு பாரா அளவுக்கு அவர் பேசியவுடன் அவரை நிறுத்தி வைத்துக் கொண்டே காரியதரிசி ஏன் தமிழ் மொழிபெயர்ப்பை வாசிக்கிறார் ? குடியரசுத் தலைவர் பேசி முடித்து அமர்ந்த பிறகு இந்த மொழிபெயர்ப்பை வைத்துக் கொள்ளக் கூடாதா?'' என்கிறேன் நான் நண்பரிடம்.

''நீங்கள் சொல்வது ரொம்ப சரி; அவர்கள் செய்வது ரொம்ப தப்பு'' என்கிறார் பாலகுருநாதன்.

## 2. விவாத விழா

இரண்டாவது நாள் மாலை. பட்டி மன்றத்துக்கென்று ஒரு மாலைப் பொழுதையே ஒதுக்கியிருக்கிறார்கள். ராஜாஜி மண்டபத்தில் பொதுமக்களும் கணிசமான எண்ணிக்கையில் பொழுதுபோக்குக்காக ஒதுங்கியிருக்கிறார்கள்.

''இன்றைய உலகை எழுத்தால் திருத்த இயலுமா? இயலாதா?'' என்பது விவாதத் தலைப்பு.

''பட்டி மன்றம் என்பது பனின் சடுகுடு மாதிரித்தான். எந்தக் கட்சி அதிக 'தம்' பிடிக்கிறது என்று பார்க்கலாம்'' என நினைக்கிறேன் நான்.

பட்டிமன்றத்துக்கான தொடக்க உரையை ஆற்றும் பொறுப்பை ஏற்றிருந்த கல்வி அமைச்சர் மாதவன் கச்சிதமாகக் குறிப்பிட்ட நேரத்தில் மேடையில் வந்து அமர்கிறார். அவருடைய தொடக்க உரையும் கச்சிதமாக இருக்கிறது. 'இங்கு எழுத்தாளர்களைவிடப் பொதுமக்களே அதிகமாகக் குழுமியிருப்பதிலிருந்து எழுத்தால் இன்றைய உலகத்தைத் திருத்த முடியும்' என்று தெளிவாகிறது என ஆரம்பிக்கிறார் திரு மாதவன். சுவையான பேச்சு.

'இயலும்' கட்சியைத் தொடக்கி வைக்கும் பகீரதன் எதிர்க் கட்சித் தலைவர் தமிழ்வாணனை அவர் எழுத்துத் திறனுக்காகப் புகழ ஆரம்பிக்கிறார். தம் கட்சியை நிலை நாட்ட எதிராளியையே பயன்படுத்தும் தந்திரம் !

ஆனால் 'இயலாது' கட்சித் தலைவர் தமிழ்வாணன் 'நான் வஞ்சகப் புகழ்ச்சிக்கு ஆளாக மாட்டேன்' என்று தம் பேச்சைத் தொடங்குகிறார். மொத்தத்தில் இருவர் பேச்சிலும் ஆதாரபூர்வமான விவாதக் கருத்து இல்லை. ஏதோ வேடிக்கையாகப் பேசிச் சமாளிக்கப் பார்க்கிறார்கள். தவறு அவர்களிடம் இல்லை. விவாதத்துக்குக் கொடுக்கப்பட்ட தலைப்பில்தான் இருக்கிறது.

ஒத்துப் பாட வந்தவர்கள் நிலைமையும் இப்படித்தான் !

அத்தனை பேரும் பேசி முடிக்கிறார்கள். சிலர் கால வரம்பை மீறிப் பேசுகிறார்கள். சிலர் விஷய வரம்பை மீறிப் பேசுகிறார்கள். பார்வையாளர் பகுதியிலும் இதனால் சலசலப்பு ஏற்படுகிறது.

பட்டிமன்றத்துக்கு நடுவராக அமர்ந்திருப்பவர் திரு மா. ஷண்முக சுப்பிரமணியம் அவர்கள். சட்டம் படித்தவர். ஆகையால், அவர், படிப் படியாக, தர்க்க ரீதியில் எழுத்து என்றால் என்ன என்பதை விளக்கி, எழுத்தால் இன்றைய உலகைத் திருத்த இயலும் என்ற கட்சியின் சார்பில் தம் தீர்ப்பை வழங்குகிறார். கலகலப்புடன் அவை கலைகிறது.

## 3. கதம்ப விழா

மூன்றாம் நாள் காலை முதல் இரவு வரை பல ரக நிகழ்ச்சிகள் பரவிக் கிடக்கின்றன. திருவள்ளுவர் அறநால் அரங்கில் ஆரம்பித்து எழுத்தாளர் கலந்துரையாடல், கவியரங்கம் வழியாகச் சிறப்புச் சொற்பொழிவு நிகழ்ச்சி வரை போகிறது.

இன்று எனக்கு அருகில் அமர்ந்திருப்பவர் எனக்கு முன்பின் தெரியாத ரசிகப் பெருமக்களில் ஒருவர். எழுத்தாளர் இல்லை. பெயர் சுந்தரமூர்த்தி என்கிறார்.

''திருக்குறளைப் பற்றிப் பேசினவர் நல்லாப் பேசினாருங்க. உணர்ச்சியோடு பேசினாரு'' என்கிறார். அவர் பெயர் புலவர் ஜி. முருகையன் எம். எல். ஏ. என்று நிகழ்ச்சி நிரலில் கண்டிருக்கிறது.

தொடர்ந்து திருக்குர்ஆனைப் பற்றி அப்துல் வஹாப் அவர்களும் சத்திய சோதனை பற்றி வி. ஆர். ராதாகிருஷ்ணன் அவர்களும் பேசுகிறார்கள். நெ. து. சுந்தர வடிவேலு அவர்கள் தலைமை தாங்கி முத்தாய்ப்பு வைக்கிறார்.

எழுத்தாளர் கலந்து உரையாடல் முற்பகல் பகுதியில் எழுத்தாளர்கள் அதிகமாக அக்கறை காட்டவில்லை. ஓரிருவர் வந்து சில பிற மொழிக் கதைகளை அவையோருக்குச் சொல்லிப் பழகுகிறார்கள்.

''சுகமில்லீங்க ! விறுவிறுப்பு இல்லை. பசி வேளையாயிற்றே!'' என்கிறார் சுந்தரமூர்த்தி.

பிற்பகல் எழுத்தாளர் கலந்துரையாடல் அநேகமாகக் கைவிடப்பட்ட நிகழ்ச்சியேயாகிறது. ஆனால் அமைதியாகக் கோமகள் அவர்களும், ஆவேசமாகத் தஞ்சை வேதாசலம் அவர்களும் இன்றைய தமிழ் நாவல்களைப் பற்றிப் பேசுகிறார்கள்.

நோயில் விழுந்து மீண்ட எழுத்தாள அன்பர் புதுமைச் சித்தன் அவர்களின் புனர் வாழ்வுக்காக, முயற்சி எடுத்து வரும் திரு வேம்பு, அவையோருக்கு ஒரு வேண்டுகோள் விடுக்கிறார். அவ்வளவுதான், வந்திருந்தோர் தங்களால் இயன்றதை அங்கேயே கொடுக்க ஆரம்பித்து விடுகிறார்கள். கவியரங்க நிகழ்ச்சி ரத்தானாலும் கவலையில்லை என்ற வேகத்தில் ரசிகர்கள் பணம் கொடுக்க ஆரம்பிக்கிறார்கள். நூற்றி ஐந்து சேர்கிறது. அப்புறம் தான் கொத்தமங்கலம் சுப்பு தலைமையில் கவியரங்கம் தொடங்குகிறது.

''பரவாயில்லீங்க ! சிலரோட வார்த்தைகளிலே உசிரு இருக்கு. சில பேரோட குரலிலே உசிரு இருக்கு. மொத்தத்திலே பரவாயில்லே'' என்கிறார் சுந்தரமூர்த்தி, கவியரங்கத்தின் போது. 'உள்ளம் உயர' என்பது கவிதைப் பொருள் தலைப்பு. பொன்னடியான் என்ற கவிஞர் பார்வை

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது — ஸன்லைட்




ஸன்லைட் சோப்பினால் சலவைசெய்து பார்த்தீர்களானால் தெரியும் வெட்ட வெளிச்சமான உண்மை: சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி! சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை—தூய்மை ஓங்க வெளுக்கும் ஒளி நிரக்க. உங்கள் துணிகள் அனைத்துக்கும் உரியது ஸன்லைட்.

**உங்கள் அன்றாடத் துணிகளின் சலவைக்குரியது ஸன்லைட்**

4, 63-140 TH

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

யையும் உயர்த்தி, 'அப்போலோ வீரருக்கு வணக்கம்' என்று ஆரம்பிக்கிறார். பெயர் கொடுத்து வராமல் இருந்த சிலர் நிகழ்ச்சியைச் சீக்கிரம் முடிக்க உதவுகிறார்கள்.

கடைசி நிகழ்ச்சியான சிறப்புச் சொற்பொழிவுகள் நூற்றுக்கு நூறு சிறப்பாக அமைகிறது. பேராசிரியர் அன்பழகன் உற்சாகத்துடன் இனிக்க மணக்கத் தலைமை வகித்துப் பேசத் தொடங்குகிறார். ஆனால் நிகழ்ச்சியில் இடம் பெற்றிருந்த இவரும், எம். ஜி. ஆர்., கி. வா. ஜ. ம. பொ. சி. உட்படச் சுமார் முக்கால் மணி நேரத்துக்குள் பேசி முடித்து விழாவை நிறைவுறச் செய்ய வேண்டும் என்ற நிர்ப்பந்தம் எதிர்பாராமல் எழுந்து விடுகிறது. மண்டபத்தை ஏழு மணி அளவுக்கு வேறு அரசாங்க நிகழ்ச்சிக்காகக் காலி செய்து கொடுத்தாக வேண்டியிருக்கிறது! நாலு நாட்கள் மகாநாட்டுக்காக மண்டபத்தைக் கொடுத்து விட்டுப் பிறகு அதில் ஒரு நாள் அரசாங்க விருந்து வைக்க வேண்டியிருப்பதால் ஏழு மணிக்கே மகாநாட்டு நிகழ்ச்சிகளை முடித்து விடுங்கள் என்று சொல்வது அவ்வளவு நன்றாக இல்லை என்றாலும் வேறு விதத்தில் இதுவே நலன் பயக்கிறது. அலுப்பு சலிப்பு தட்டாமல் குறைந்த நேரத்தில் நிரம்பக் கருத்துக்களைக் கேட்க வசதிசெய்து தருகிறது இந்த வேண்டுகோள்.

புரட்சி நடிகர் ஏற்கனவே வசூலான தொகையுடன் தமது நன்கொடையையும் சேர்த்துப் புதுமைச்சித்தனுக்கு வழங்குகிறார். ,சங்க உறுப்பினர்களுக்குப் பகல் உணவும் மறு நாள் பகல் படம் பார்க்கும் வசதியும் ஏற்பாடு செய்திருக்கும் அவர், ''பிராபல்யம் அடைந்துவிட்ட காரணத்தால் எழுத்தாளர் மத்தியில் என்னைக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறார்கள். இதிலிருந்து பிரபலமாவதில் உள்ள ஆபத்து தெரிகிறது. ஆனால் நான் ஏமாந்து விடவில்லை! எழுத்தாளர்களும் இதே போல் பிராபல்யம் அடைந்துவிட்ட காரணத்தால் ஏமாந்து போகாமல் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்; மனத்தில் உண்மை ஒளியுடன் எழுத வேண்டும்'' என்கிறார். பொன்மொழியாகப் போற்றப்பட வேண்டிய கருத்துக்கள்.

முரசொலி மாறன் புதிய சொற்களை உருவாக்கித் தமிழை வளப்படுத்த வேண்டிய கடமையும் அவற்றை அடிக்கடி பயன்படுத்திப் பிரபலப் படுத்த வேண்டிய உரிமையும் பத்திரிகைகளுக்கு இருப்பதை விளக்குகிறார். ''பாராளு மன்றம் என்ற சொல் ஒரு பொதுக்கூட்டத்தில் பயன்படுத்தப்பட்ட போது ராஜாஜி, 'அவர்கள் என்ன பாரையா ஆள்கிறார்கள்? நாட்டையல்லவா ஆள்கிறார்கள்?' என்றார். அன்று முதல் நாடாளு மன்றம் என்ற சொல் வழக்கில் வந்திருக்கிறது. முரசொலி பத்திரிகை 'ராசாசி' என்றே அச்சிட்டு வந்த போது ராஜாஜி, 'முரசொலி ஆசிரியருக்கு' என்று ஆரம்பித்து ஒரு கடிதம் எழுதினார். 'ஜெயலலிதாவை செயலலிதா என்று குறிப்பிடாத போது ராசாசியை ராஜாஜி என்று அச்சுக் கோத்தால் என்ன?' என்று கேட்டிருந்தார் அந்தக் கடிதத்தில்! அது முதல் முரசொலி காரியாலயத்தில் ஐ, ஷ, ஸ போன்ற எழுத்துக்களையும் பயன்படுத்த ஆரம்பித்தோம்.'' இப்படிப் பல சுவையான நிகழ்ச்சிகளைக் கூறுவதுடன் அண்ணாதுரை அவர்களின் எழுத்தாற்றலையும் எடுத்துரைக்கிறார் மாறன்.

★

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் நிகழ் காலத் தலைவர் வேம்பு இவ்விழாவில் ஒதுங்கியே இருந்தது போலத் (நாற்காலியில் உட்காருவதில்கூடத்தான்) தோன்றியது. எதிர்காலத்தில் சங்க வளர்ச்சியிலும் ஒதுங்கி விட மாட்டார் என்றும் ஒதுங்கிக் கொள்ள நினைக்கும் எழுத்தாள அன்பர்கள் யாரையும் விடாமல் அரவணைத்துச் செயலாற்றுவார் என்றும் நம்பலாம். எழுத்தாளர்களின் முழு ஒத்துழைப்பும் இதற்குத் தேவை.

தமிழ் எழுத்தாளர் சங்கத்துக்கு இன்னொரு யோசனை. சமீப காலமாக மறுமலர்ச்சித் தமிழ் இலக்கியத்துக்குக் குழி பறிக்கும் அவமானகரமான காரியத்தில் நம்மவரிலேயே சிலர் ஈடுபட்டிருக்கிறார்கள். இவர்கள் ஆங்கிலத்தில் எழுதுகிறார்கள். வடக்கே உள்ள ஆங்கிலப் பத்திரிகைகள் இவர்களுக்குத் தீர யோசியாமல் ஆதரவு தருகின்றன. இவற்றுக்கு மறுப்புத் தெரிவித்து எழுதினால் அதையும் பிரசுரிக்கின்றன. ஆனால் நாச வேலையும், குழி பறிக்கும் வேலையும் மீண்டும் தொடர்கின்றன. தமிழில் சமீப காலமாகத் தரக் குறைவான கதை கட்டுரைகள் பல வந்திருக்கின்றன என்பதை மறுக்கவில்லை. ஆனால் மிக உன்னதமான படைப்புக்களும் தோன்றியுள்ளதை மறைக்கக் கூடாது. குழி பறிப்பவர்களுக்கு மறுப்புத் தெரிவித்துக் குறிப்பிட்ட பத்திரிகைகளுக்கு எழுதுவதைக் காட்டிலும் ஆக்க ரீதியில் இன்னின்ன தரமான படைப்புக்கள் தமிழில் தோன்றியிருக்கின்றன என்பதை நவீன காலத் தமிழ் இலக்கியத்தில் ஆர்வம் கொண்டுள்ளவர்களும் ஆங்கிலத்திலும் ஹிந்தியிலும் புலமை பெற்றவர்களுமான பெரியோர்களைக் கொண்டு எழுதச் செய்து வடக்கே உள்ள பல பத்திரிகைகளுக்கும் அனுப்ப வேண்டும். தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் முக்கியமான பணிகளுள் ஒன்றாக இதனைக் கருதி நடப்பு ஆண்டுத் தலைவர் செயலாற்ற வேண்டும்.

— கோமதி சுவாமிநாதன்

## அலாரத்துக்கு 'டிமிக்கி!'



கடிகாரத்தில் அலாரம் அடித்ததும் அதைத் தட்டி நிறுத்தி விட்டு மீண்டும் குறட்டை விடும் பழக்கம் உங்களுக்கு உண்டா? அப்படியானால் 53 ம் பக்கம் பாருங்கள்!

# அத்தியாயம் 14

மதுரையில் எத்தனை நாட்கள் தங்கியிருக்க வேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டு வந்தாளோ, அதைவிட இரு மடங்குக்கும் அதிகமான நாட்களே தங்கியிருந்து விட்டுச் சுந்தரி தன் கணவனோடும் குழந்தையோடும் திருச்சிக்குப் பயணமானாள். வடக்கு நோக்கிச் செல்லும் ரயில் வண்டியில் அவள் ஏறிய மாத்திரத்திலேயே தெற்கு நோக்கிச் செல்லும் ரயில் வண்டியிலோ பஸ்ஸிலோ தானும் சாத்தூருக்குப் புறப்பட்டுவிடத் துடித்துக் கொண்டிருந்தாள் தங்கம். மதுரையில் இருக்கவே அவளுக்குப் பிடிக்கவில்லை. அவ்வளவு தூரம் அவள் மனம் மாறி விட்டதற்கு ரங்கராஜனும் விஜயாவும்தான் காரணகர்த்தாக்களாகி விட்டார்கள்.

கிராமத்துக்குப் போய்த் திரும்பிய ரங்கராஜன் ஒரு புதிய ஆளாகத் திரும்பி வந்திருப்பதாகத் தங்கத்துக்குத் தோன்றிவிட்டது. அவனுடைய பேச்சு முழுக்க முழுக்க உல்லாசமாகவும் விளையாட்டாகவும் இருந்ததுபோல்



இடையிடையே ஆழ்ந்த உணர்ச்சியோடும், சில சமயங்களில் அவனையே கடிந்து கொண்டும் பேசியதை அவள் கவனித்தாள். இந்தப் போக்கு அவளுக்கு விபரீதமாகப் பட்டது. தன் மனக் கஷ்டத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் அவனைப் பழையபடியும் விளையாட்டுப் பிள்ளையாக மாற்றிவிட அவள் ஆசைப் பட்டுக் கொண்டிருந்த அதே சமயத்தில் விஜயாவைப் பற்றிய பேச்சும், விஜயாவின் வருகையும் அவளுடைய நம்பிக்கையையும் தெம்பையும் சிதற அடித்து விட்டன.

விஜயாவுக்கு அவன் அளுவசியமாக முக்கியத்துவம் கொடுக்கிறான் என்று அவள் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தாள். விஜயா ஒரு பெரிய பணக்கார வீட்டுப் பெண் என்பதும், பட்டதாரிப் பெண் என்பதும் தெரிய வந்தது, அவளுடைய சங்கடத்தை இன்னும் பெரிதாக்கி விட்டது. விஜயாவை இனி அலட்சியப்படுத்த முடியாது, அவளைப் பற்றி அலட்சியமாகப் பேசவும் முடியாது என்பதை அவள் உணரலானாள். இந்தச் சங்கடத்திலிருந்து மீள்வதற்காக, சுந்தரியைத் தன் கட்சிக்கு இழுக்க முயற்சி செய்தாள் தங்கம்.

இதுவரையில் எந்தப் பெண்ணையும் ஏறிட்டுப் பார்த்திராத ரங்கராஜன், கடைசியில் ஒரு 'நெட்டைக் கொக்கு'க்காக ஏன் இப்படி உயிரை விடுகிறான் என்று சுந்தரியிடம் தங்கம் அங்க



## பரவசமாக்கும் பரிமளசுகந்தம்-பிளாக் ரோஸ்
## கோயா தயாரிக்கும் ஒரு அழகு சாதன பௌடர்




கோயா பிளாக் ரோஸின் சுகந்தச் சுழலில
அகபபட்டுக்கொள்ளுங்கள். நீங்கள் வெளிவரும்
போது பெண்மை சிறக்கும். வாசனை மணக்கும்.
உள்ளம் உவக்கும். எல்லாம் நீங்கள் விரும்பிய விதமே
இங்கிதமறிந்த மங்கை எந்தபபணிக்கும் தயார்.
மூன்று இதர கோயா சிருஷ்டிகள்: புதிய சிருங்கார
சாதனம் லவ் அஃபேர், புது மலர் மணமுள்ள
கார்டினியா, பரவசமூட்டும் பாஸ்போர்ட்.
உங்களை நாள் முழுவதும் குளுமையுடனும்
புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கும்.

இந்த நறுமணப் பௌடர்களைத் தயாரிப்போர்: **கோயா**



பாரிஸ் . லண்டன் . நியூயார்க்

அட்லாண்டிஸ (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

AGC-8 TAM

வாய்த்தாள். ஆனால் விஜயாவை 'நெட்டைக் கொக்கு' என்று அவள் இழித்துப் பேசும்போதெல்லாம் மிகவும் வைராக்கியமாக மறுத்துக் கொண்டு வந்தாள் சுந்தரி. விஜயா அழகாகத் தான் இருக்கிறாள் என்பது அவளுடைய தீர்மானமான அபிப்பிராயமாக இருந்தது.

"சுந்தரி, உன் அண்ணனுடைய புத்தி போகிற போக்கைப் பார்த்தியா?" என்று ஆரம்பித்தாள் தங்கம்.

"தங்கம்! இப்படிப் பேச ஆரம்பிச்சிட்டயே, என்ன சங்கதி? 'உன் அண்ணனுவது! ஏன், **உனக்கு** அவன் அண்ணன் இல்லையா? இப்படித் துண்டு தறிச்சுப் பேச எப்போ படிச்சே?"

"ராஜா போற போக்கு எனக்குப் பிடிக்கல்லே, சுந்தரி. நான் கேட்கிறேன், அவள் இவன் கால் தூசி விலை பெறுவாளா? நீயே சொல்லு! அவன் அழகு எங்கே? அவள் மூஞ்சி எங்கே?"

"தங்கம்! சும்மா இரு. நீ சொல்றாப் போலே அவ அப்படி ஒண்ணும் விகாரமா இல்லே. இவனுக்கு அவள் ஜோடி இல்லேன்னு வேணும்னு சொல்லு, ஒப்புக்கொள்கிறேன். அதுக்காக அவள் விகாரம்னு ஆயிடாது."

"இருக்கட்டும். நானும் அதைத் தான் சொல்றேன். இவனுக்கு அவள் சரி ஜோடியா?"

"எதுக்கு நீ இப்படி அநாவசியமாக் கவலைப்படறே! நாம்ப ஆசைப்பட்டாலும் அவளை இவனுக்குக் கட்டிக் குடுத்திடப் போறாங்களா, என்ன? முதலிலே அவங்க ஜாதி வேறே; நம்ப ஜாதி வேறே. அடுத்தபடி அவங்க பெரிய பணக்காரங்களா இருக்காங்க. நாம்ப வாடகை குடுத்துக் குடியிருக்கிற இந்த வீட்டையே அவங்க விலைக்கு வாங்கிடப் போறாங்களாம். லட்சாதிபதியா இருக்கப்பட்டவர் தன்னுடைய பெண்ணை இன்னொரு லட்சாதிபதிக்குக் குடுப்பாரா? நம்ப 'வீட்டுக்கு அனுப்புவாரா? பணக்காரங்க பணத்தைத் தான் பார்ப்பாங்க; அழகைப் பார்த்து மயங்கிட மாட்டாங்க! நீ கவலைப் படாதே!" என்று தங்கத்துக்குச் சூடு கொடுப்பதுபோல் பேசினாள் சுந்தரி.

விரும்பினாலும் எட்டாத உயரத்தில் இருக்கும் விஜயாவை, 'வேண்டாம், வேண்டாம்' என்று புறக்கணிப்பதை மற்றவர்கள் அறிந்தால் சிரிப்பார்கள் என்றுகூடச் சுந்தரி சொன்னாள்.

தங்கம் இடிந்து போய் விட்டாள். விஜயா திடீரென்று அதி உன்னதமான ஸ்தானத்தில் போய் அமர்ந்து தன் தலைக்கு நேராகப் பாதங்களைத் தொங்கப் போட்டுக் கொண்டு அமர்ந்துவிட்டாளே என்று தங்கம் அவஸ்தைப் பட்டாள். சுந்தரியைத் தன் கட்சிக்குத் திருப்பி விஜயாவை எப்படியாவது அரியாசனத்திலிருந்து கீழே தள்ளி விட வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தாள் அவள். ஆனால் சுந்தரியோ ரங்கராஜனுக்குப் போட்டி போட்டுக் கொண்டு விஜயாவைத் தூக்கிச் சுமந்தாள். சங்கடம் அதிகமாகி விட்டது. அவளுக்கு அதிலிருந்து விடுபட, மிஞ்சியிருந்த ஒரே வழி சாத்தூரை நோக்கிச் செல்லும் வழி ஒன்றேதான். மதுரையை விட்டு எவ்வளவு சீக்கிரத்தில் ஓடிவிட்டாலும் நல்லது என்று, சுந்தரியை வழியனுப்புவதற்கு அவசரப் பட்டுக் கொண்டிருந்தாள் தங்கம்.



தகப்பனார்: ஏண்டா மணி! பி. யூ. ஸி. ரிஸல்ட் வந்துவிட்டதே! நீ பாஸா! தேங்காய் உடைக்கறாயே!

மணி: நான் பாஸ் இல்லே. அதோ சுரேஷ் பாஸ். அவனுக்குத் தேங்காய் உடைக்க பலம் இல்லையாம். அதுக்காக நான் எல்லாத் தேங்காயையும் உடைக்கிறேன்.

---

மகளைப் போலவே தந்தையும்—அருணாசல முதலியாரும் அந்த வழியனுப்பு நாளுக்காகக் காத்துக் கொண்டிருந்தார். சுந்தரியும் அவள் கணவனும் புறப்பட்டுப் போன பிறகுதான் தம் தமையனார் வீட்டு விஷயங்களைப் பேசுவதற்குச் சௌகரியமாக இருக்கும் என்று அவர் கருதினார்.

திருச்சிக்குப் புறப்படும் தினத்தில் சுந்தரியும், அவள் கணவனும், குழந்தையும் ரங்கராஜனும் கோவிலுக்குப் போய்ச் சுவாமியையும் அம்மனையும் தரிசித்து விட்டு வந்தார்கள். அதன் பின் சுந்தரி மட்டும் தன் குழந்தையோடு விஜயாவிடம் விடைபெற்றுக் கொள்வதற்கு அவள் வீட்டைத் தேடிப் போனாள். போவதற்கு முன் அவள் தங்கத்தையும் தன்னோடு வரும்படி அழைத்தாள். ஆனால், 'எனக்கு வேலை இருக்கு' என்று சொல்லி மறுத்துவிட்டாள் தங்கம்.

'என்ன வேலையோ!' என்று சொல்லிப் பரிகாசமாகச் சிரித்துவிட்டுச் சுந்தரி

குழந்தையைத் தூக்கிக் கொண்டு தெருவில் இறங்கினுள்.

விஜயாவும் அவள் தங்கையும் தாயும் சுந்தரியை அன்போடு வரவேற்ருர்கள். ரூபியை ஒவ்வொருவரும் தூக்கித் தனித்தனியே மடியில் வைத்தும், இடுப்பில் தாங்கியும், முத்தமிட்டும் அருமை பாராட்டினுர்கள். சுந்தரிக்குக் குளிர் பானம் கொடுத்து உபசரித்தார்கள். விடைபெற்றுக் கொள்ளும் போது, ''திருச்சிக்கு வந்தால் எங்க வீட்டுக்கு அவசியம் வரணும்'' என்று கேட்டுக் கொண்டாள் சுந்தரி.

''திருச்சிக்கு நாங்கள் வந்தாத்தானே உங்க வீட்டுக்கு வரச் சொல்றீங்க! இல்லையா? நாங்கள் எதற்காகத் திருச்சிக்கு வரப் போரேம்?'' என்று கேட்டாள் விஜயா.

சுந்தரி இதைக் கேட்டதும், தான் பேசத் தெரியாமல் பேசி வசப் பிசகாக மாட்டிக் கொண்டது போன்று நிணறினுள். அவள் முகம் பரிதாபமாக ரத்தம் இழந்து வெளிறியது. இதைப் பார்த்த விஜயாவின் தாயார், தன் மகள் எதற்காக அப்படிப் பேசி, வீட்டுக்கு வந்தவளின் மனசைப் புண் படுத்த வேண்டும் என்று வருந்தினுள்.

விஜயா ஒரு பேதைக் குழந்தையைப் பார்த்துச் சிரிப்பது போல் சுந்தரியைப் பார்த்துச் சிரித்தாள்.

''நிஜமாகவே திருச்சிக்கு வரவேண்டிய வேறே வேலை எதுவும் எங்களுக்குக் கிடையாது. உங்க வீட்டுக்கு வரணும்னுத்தான் திருச்சிக்கு வரணும்... உங்க வீட்டுக்குக் கூப்பிடுங்க. நாளைக்கே திருச்சிக்கு வர்ரேம்!''

சுந்தரிக்கு மீண்டும் முகத்தில் ரத்த ஓட்டம் ஆரம்பமாயிற்று. மகிழ்ச்சி ததும்ப, ''நீங்க சொல்றதைத்தான் நானும் சொன்னேன். ஆனு, வேறு விதமாச் சொன்னேன். எங்க வீட்டுக்கு வரணும் என்கிறதுக்காகவே திருச்சிக்கு வாருங்கோன்னு சொன்னு, நீங்க என்னை அகம்பாவம் பிடிச்சவள்னு நினைச்சுப்பிடுவீங்களே!'' என்ருள்.

அவள் பேசுவதைக் கேட்டு மனத்தைப் பறி கொடுத்த விஜயாவின் தாயார், அருகில் வந்து அவள் முகத்தைத் தடவி ''ஒரு நாள் சிநேகிதத்திலே எங்களை இவ்வளவு பிரியமாத் தேடி வந்து, பயணம் சொல்லிக்கிறே! இப்படி அருமை பெருமையாப் பழகுகிற மனுஷாள் கிடைக்கிறதுதாம்மா இந்த உலகத்திலே பெரிசு. மகராஜியாப் போயிட்டு வா. நாங்களும் உன் வீட்டுக்கு வர்ரேம்'' என்று சொல்லி விடை கொடுத்தாள்.

''எந்த வண்டிக்குப் போறீங்க?'' என்று கேட்டாள் விஜயா.

''ஜனதா எக்ஸ்பிரஸ்.''

''அப்படின்னு இன்னும் ஒன்னரை மணி நேரந்தான் இருக்கு. எல்லாம் 'பாக்' பண்ணியாச்சா?''

''எல்லாம் ரெடி. குதிரை வண்டியைக் கூப்பிடவேண்டியதுதான் பாக்கி'' என்ருள் சுந்தரி.

அப்போது விஜயா எதிர்பாராத விதமாக, ''நீங்க குதிரை வண்டியைக் கூப்பிட வேண்டாம். வேறே வண்டி இருக்கு. நீங்க வீட்டுக்குப் போங்க. நான் வர்றேன்'' என்ருள்.

''வேறே வண்டியா?'' என்று சுந்தரி கேட்டாள்.

''விஜயா! கார்...?'' என்று தாயார் கேட்டுக் கொண் டிருக்கும்போதே, ''அம்மா! நீ சும்மா இரு... சொல்லாதே'' என்று சொல்லி விட்டுச் சுந்தரியை வெளியே அழைத்துக்கொண்டு வந்தாள் விஜயா.

''நீங்க போங்க. அப்பாவுக்கு நான் போன் பண்ணிட்டு வர்றேன்'' என்று சொல்லிச் சுந்தரியை அனுப்பி வைத்தாள் விஜயா.

அரை மணி நேரத்துக்குள் ரங்கராஜன் வீட்டு வாசலில் ஒரு பெரிய கார் வந்து அந்தக் குறுகலான தெருவில் முக்கால்வாசியை அடைத்துக் கொண்டு நின்றது. கதவுகளைத் திறந்து கொண்டு டிரைவரும், விஜயாவும் இறங்கினுர்கள். அவள் வீட்டுக்குள்ளே வந்தாள். வந்ததும் எதிரே முதலில் தென்பட்ட ஜானகியம்மாளைத்தான் பார்த்தாள். அவள் பக்கத்தில் சமையற்காரியைத் தவிர வேறு யாரும் அப்போது இல்லை. விஜயா அந்த அம்மாளின் கைகளைப் பிடித்துக் கொண்டு, அவளுடைய முகத்தைப் பார்த்த வண்ணம் சில கணங்கள் மௌனமாக நின்ருள்.

''அம்மா! சுந்தரி ஊருக்குப் போருளாமே. நான் வழியனுப்ப வந்திருக்கிறேன்.''

அதுவரையிலும் ஒன்றும் புரியாமல் நின்ற ஜானகியம்மாள் அப்போதுதான் ''வாம்மா'' என்ருள்.

''நாளையிலிருந்து நீங்க...'' என்று ஆரம்பித்தாள் விஜயா. மேற்கொண்டு பேச முடியவில்லை. தயக்கம், தடுத்தே விட்டது. அந்த ஆரம்ப வார்த்தைகளை அப்படியே வைத்துக் கொண்டு வேறொரு விஷயத்தைச் சொல்லி வாக்கியத்தை முடித்தாள்.

''....பொழுது போகாமல் சிரமப் படுவீங்க இல்லையா?''

''பொழுது போகாமல் என்ன? பக்கத்திலேயே நீ இருக்கிறே!...'' என்று

# உங்களுக்கு விருப்பமான
# ஹார்வி துணியைத் தேர்ந்தெடுங்கள்



ஹார்வி

## ட்வின் டஸ்கர்



அதிநேர்த்தியான தரமுள்ள துணிகள் — பாப்ளின்கள், டிரில் வகைகள், லாங்கிளாத் முதலியன — விலையில் சுமாரானவை, உறுதியானவை. நீடித்து உழைப்பவை. பல சலவைகளுக்குப் பிறகும் அவைகளின் மிருதுவான அமைப்பும் 'புதுத் தன்மையும்' குன்றாதிருக்க வேண்டி சிறந்த முறையில் தயாரிக்கப்பட்டவை.

ஹார்வி

## ஸாராடோகா

'டெரீன்' காட்டன் ஷர்டு துணிகள்

மாசற்ற நெசவும், பகட்டான தோற்றமுமுள்ள இந்த ஷர்டு துணிகள் மனதுக்குப் பிடித்த பற்பல வண்ணங்களில் அளிக்கப் படுகின்றன.





ஹார்வி

## ஸாராபாண்ட்

'டெரீன்' இணைந்த ஸூட்டிங் துணிகள்

ஆடவர்களின் சீருடைக்கு என்றைக்கும் ஏற்றவை. தேர்ந்தெடுக்க வசதியாக, நேர்த்தியான வெள்ளை நிறத்திலும் மற்றும் லேசான க்ரே முதலிய பல நிறங்களிலும் இவை வழங்கப்படுகின்றன.

*Bensons-1066 I TAM*

தயாரிப்போர்:
மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்,
மதுரை



அந்த அம்மாள் சொல்லும்போதே விஜயாவுக்கு ஆச்சரியத்தால் கண்கள் விரிந்தன; வாயிதழ்களும் திறந்தன. அவள் செவிகளைக் குளிர்வித்த இன்ப வெள்ளம், அடுத்த கணம் அவள் கண்களை நனைத்து உடம்பெல்லாம் மயிர்க்கூச்செறியச் செய்து, உதடுகளையும் துடிக்கச் செய்து விட்டன.

''அம்மா! நான் ஆசைப்பட்டதையே நீங்களும் சொல்றீங்க, அம்மா. இதைச் சொல்லத்தான் நானும் வாயெடுத்தேன். நாளையிலிருந்து நீங்க என்னைச் சுந்தரியா நினைச்சுக்கிடலாம்னு சொல்ல வந்தேன்.''

''நீயே இப்படிச் சொல்றப்போ எனக்கு என்னம்மா? உன்னை என் பெண்ணுன்னு சொல்லக் குடுத்து வச்சிருக்கணுமே...''

''சும்மா இருங்கம்மா. நீங்க குடுத்து வச்சிருக்கணுமா, நான் குடுத்து வச்சிருக்கணுமா என்கிறதை வேறே யாரும் சொல்ல வேண்டாம். கண்ணுடியிலே பாருங்க. உங்க முகமே சொல்லும்...''

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கையிலேயே மாடியிலிருந்து எல்லோரும் இறங்கி வந்து விட்டார்கள்.

விஜயாவைப் பார்த்த ரங்கராஜன் அவளுடைய எதிர்பாராத வருகைக்காக மட்டுமின்றி, அவளுடைய கோலத்துக்காகவும் வியப்புக்குள்ளானுன்; அதே போல் சுந்தரியும் ஆச்சரியப்பட்டாள். அரை மணி நேரத்துக்குள் அவள் உடையை மாற்றிக் கூந்தலையும் ஒரு விதமாக வாரி விட்டு நவீனக் கொண்டை போட்டுக் கொண்டு வெளி நாட்டுக்குச் செல்ல விமானம் ஏறப் போகும் நாகரிகப் பெண்ணைப் போல் வந்து தோன்றினுள். அவளுடைய மன உல்லாசத்தை யெல்லாம் எடுத்துக் காட்டின அவளுடைய தோற்றமும் துடிப்பும்.

எல்லோருக்கும் வணக்கம் செலுத்தி விட்டு, சுந்தரியைப் பார்த்து, ''வண்டி வந்து விட்டது'' என்றுள். தெரு வாசலைச் சுட்டிக் காட்டினுள். எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள்.

''ஸ்டேஷனுக்கு எத்தனை மணிக்குப் புறப்படறது?'' என்று கேட்டாள் விஜயா.

அவளுடைய கேள்விக்கு யாருமே பதில் சொல்லவில்லை. எல்லோருடைய கவனமும் காரைப் பார்த்தே திரும்பியிருந்தது.

''கார் வந்திருக்கே!...'' என்றுள் சுந்தரி.

## 'டிமிக்கிக்கு இடம் தராத 'ட்ர்ர்ரிங்!'










''அப்பாவுக்குப் போன் பண்ணி னேன். அனுப்பி வைச்சார்.''

''உங்க காரா?'' என்று ரங்கராஜன் கேட்டான்.

'ஆம்' என்று சொல்ல அவளுடைய அடக்கம் இடம் தரவில்லை.

''கார் எதுக்கு சுந்தரி?'' என்று அருணாசல முதலியார் கேட்டார்.

''குதிரை வண்டியிலேயே போயிட லாமே?'' என்றார் நடராஜ முதலியார்.

எடுத்த எடுப்பில் இப்படி மற்றவர் களிடமிருந்து வசதிகளை இரவல் பெற்றுக்கொள்வதற்கு அவ்விருவருடைய மனமும் சம்மதிக்கவில்லை என்பதை உணர்ந்து கொண்ட ரங்கராஜன், அது தான் சரியான மனப்பான்மை என்றும் நினைத்தான்.

''வேண்டாமே. உங்களுக்கு எதுக்கு இத்தச் சிரமம்?''

ரங்கராஜன் இவ்வாறு சொல்வதை அவள் தடுத்தோ மறுத்தோ பேச வில்லை. பேசவே அவளுக்கு நா எழ வில்லை. மௌனமாக, ஏதோ தவறு செய்து விட்டவளைப் போல் நின்றாள். அப்புறம், தான் செய்தது தவறு என்றும் நினைத்தாள். தான் கொண்டு போன காரில், அடுத்த வீட்டுப் பெரியவர்கள் — அதிலும் இரண்டொரு நாட்களுக்கு முன்பே அறிமுகமான வர்கள் — எப்படி ஏறி உட்காருவார்கள் என்று தோன்றி விடவே, முன்னும் போக முடியாமல், பின்னும் போக முடியாமல் அவள் ஸ்தம்பித்து நின்றாள்.

அவளுக்கு ரங்கராஜனே அப்போது மீட்சி கொடுத்தான்.

''சித்தப்பா! நாம்ப நடந்தே ஸ்டே ஷனுக்குப் போயிடலாம். லேகேஜ் வேணும்னு காரிலே வரட்டும்!''

''என்னப்பா! உம்.. இது... ராஜா! நீ சொல்றது...'' என்று அருணாசல முதலியார் ஒன்றோடு ஒன்று பொருந் தாத சொற்களைச் சொல்லிக்கொண்டே வந்தார்.

''நான் சொல்றது சரிதான் சித் தப்பா. அப்படியே செய்வோம். சுந் தரி, நீ காரிலே ஏறிக்கோ...'' என்றான் ரங்கராஜன். பிறகு விஜயாவைப் பார்த்து; ''எல்லோரும் கத்தியைக் காட்டி, துப்பாக்கியைக் காட்டி மிரள வைப்பாங்க. நீங்கள் காரைக் காட் டியே எங்களை என்ன செய்றதுன்னு தெரியாமல் குழப்பிட்டீங்க! பரவா யில்லை. இப்போ குழப்பம் போயிட் டது'' என்றான்.

சூழ்நிலையின் இறுக்கம் கொஞ்சம் தளர்ந்தது. பெட்டி படுக்கைகள் விரை வில் காருக்குள் வந்து சேர்ந்தன. பெண்கள் எல்லோரும் காரில் ஏறிக் கொண்டார்கள். நால்வரும் பின் சீட்டில் உட்கார்ந்தார்கள். ஜானகி யம்மாளின் பக்கத்தில் திட்டம் போட் டுக்கொண்டு வந்து உட்கார்ந்து கதவைச் சாத்தினாள் விஜயா. டிரைவரின் பக் கத்தில் இருந்த முன் பக்க சீட் காலி யாகவே இருந்தது.

டிரைவர் உத்தரவுக்குக் காத்துக் கொண்டு காரின் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு வெளியே நின்றான்.

உத்தரவு வரவில்லை. விஜயா தான் உத்தரவிட வேண்டியவள். அவள் வாயைத் திறக்காதபோது மற்றவர்கள் என்ன சொல்வார்கள்?

ஒரு நிமிஷம் ஆயிற்று. அடுத்த நிமிஷமும் அனாவசியமாகக் கழிந்தது. பின் சீட்டில் இருந்தவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தார்கள். பிறகு மூவரும் சேர்ந்து விஜயாவை ஏக காலத்தில் பார்த்தார்கள். அவர்கள் திகைப்போடுதான் அவளைப் பார்த் தார்கள். அவளோ ஒரு பெரிய தவிப் போடு அவர்களைப் பார்த்தாள். என்ன பார்த்தும் ஒன்றும் நடக்கவில்லை.

''முன் சீட்டில் ஒருவர் உட்கார லாமே!'' என்று வாய் விட்டுச் சொல் லியும் பார்த்தாள்.

அதிலும் ஒன்றும் நடக்கவில்லை.

''நாம்ப நாலு பேரும் ஏறியாச்சு. போக வேண்டியதுதான்'' என்றாள் சுந்தரி.

மூவரில் ஒருவருக்குக் கூட ரங்க ராஜனின் ஞாபகம் வரவில்லை.

விஜயா அப்புறமும் கேட்டாள்: ''புறப்படுறதா?''

''போவோம்'' என்றாள் சுந்தரி.

''...சரி!... டிரைவர்!...''

தயாராகக் காத்து நின்ற டிரைவர் உடனே காருக்குள் பாய்ந்து ஏறி உட் கார்ந்தான்.

''போகலாம்'' என்று உத்தரவிட்டு விட்டு, விஜயா ரங்கராஜனை ஏமாற்றத் துடன் ஒரு முறை திரும்பிப் பார்த்தாள்.

கார் புறப்பட்டது.

விஜயாவின் வீட்டு வாசலில் அவ ளுடைய தாயாரும் கலாவும் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களைக் கண் டதும் டிரைவர் காரை நிறுத்தினான்.

விடைபெற்றுக் கொள்ளும் நிகழ்ச்சி துரிதமாகவே நடந்து முடிந்தது.

''நானும் வரலாமோ?'' என்று கேட்டாள் கலா.

''வாயேன்!'' என்றாள் விஜயா. 'பொன் இருக்க வேண்டிய இடத்தில் பூவாவது இருக்கட்டும்!' என்று தனக் குள் சொல்லிக் கொண்டாள் விஜயா.

ரயில்வே ஸ்டேஷனை நோக்கிக் கார் விரைந்தது. (தொடரும்)

# உங்களுக்கே... பருவ மங்கையின் பைந்தளிர் மேனியெழில்.

இளமை கொஞ்சிப் புதுமெருகு மிளிரும் எழிலுக்கே... ஜெய் அழகு சோப்! சரும நெகிழ்ச்சிக்கான எண்ணெய்கள் கொழித்திட, ஆழ ஊடுருவிச் சுத்தமிடும் அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. விலை உள்ளளவும் எல்லை மீறிய செழிப்புடன் கமழும் அதன் மல்லிகை மணம் உங்களைக் கொள்ளைகொள்ளும். மறவாதீர்கள், நவீனமான உலோக ஜிகினைத் தாளுறை தரித்தது ஜெய் ஒன்றுதான்.

ஜெய்–நீங்கள் நினைப்பதை விடக் குறைவான விலை உள்ள அதி விசேஷ அழகுசாதன சோப்!

உங்கள் எழில் பெருக

# ஜெய்

அழகு சோப்

உங்கள் மணங்கவர் மணங்கமழ்வது.




**டாடா**
**தயாரிப்பு**

Bensons/J170 TM



**45 விஷமக் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டும் எனக்கு அடிக்கடி வருகிறது தலைவலி**

என்கிறார் உயர்நிலைப் பள்ளி ஆசிரியை
திருமதி ஷோபா சின்சின்கர்

# அனாஸின் எனக்கு விரைவிலே நிவாரண மளிக்கப் போதுமான சக்தி வாய்ந்தது.



# அனாஸின் என் மாணவர்களுக்கும் கூட நம்பகமானது.

அனாஸின் சக்தி மிக்கது. ஏனெனில் உலகெங்கும் டாக்டர்கள் அதிகமாகச் சிபாரிசு செய்யும் வலி நிவாரணி அதில் அதிகமாக அடங்கியுள்ளது. அது நம்பக-மானது. ஏனெனில், ஒரு டாக்டரின் மருந்துக் குறிப்பைப் போலவே மருத்துவ முறையில் அது சரிவிகிதம் செய்யப்பட்டது. எனவே இந்தியாவிலேயே உச்ச விற்பனையுள்ள வலி நிவாரணியாக விளங்குகிறது அனாஸின். தலைவலி, ஜலதோஷம், ஜுரம், உடல் வலி, பல்வலி மற்றும் தசை வலிகளுக்குச் சாப்பிடுங்கள் அனாஸின்

## அனாஸின்



சக்தி வாய்ந்த
நம்பகமான
வலி நிவாரணி

Regd. User: Geoffrey Manners & Co. Ltd.




## ரூபாய் இருநூற்று ஐம்பது, மூன்றாவது பரிசு பெற்ற சரித்திரக் கதை



சோழ சாம்ராஜ்யத்தின் பேரரசர் ராஜராஜ சோழரே முன்னின்று நடத்தி வந்த சோழர் பெரும் படை கொங்கு நாட்டின் தலைநகரமாகிய இராஜபுரத்துக் கோட்டையை நெருங்கியதும் எதிரே நிகழ்வதைக் கண்டு அப்படியே நின்று விட்டது. தான் எதிர்பார்த்தபடி நடப்பதைக் கண்ட இராஜராஜர் தம் தளபதி விஜயராயரைத் திரும்பிப் பார்த்து, ''என்ன விஜயராயரே! இப்போது என்ன சொல்லுகிறீர்கள்?'' என்றார் ஏளனமாக. ஆம்! விஜயராயரால் ஒன்றும் சொல்லத்தான் முடியவில்லை. ஏனென்றால் கொங்கு நாட்டைப் பற்றியும், அதன் வீரத்தைப் பற்றியும் இராஜராஜரிடத்து விஜயராயர் சொல்லியிருந்ததற்கு நேர்மாறாக நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. விஜயராயர் ஒன்றும் பேசாதிருப்பது கண்டு இராஜராஜர், ''நீங்கள் சொன்னதற்கும் இங்கு நடப்பதற்கும் சிறிதுதான் வேற்றுமை தெரிகிறது. பத்து தின முற்றுகையாவது வேண்டுமென்றீர்கள் நீங்கள். ஆனால் இராஜபுரத்துப் படையோ நம் படை பத்து காத தூரத்தில் வரும் போதே மண்டியிட்டு விட்டதுபோல் இருக்கிறது. நம் படை ஒரு நாள் இளைப்பாறக்கூடக் காணாத இந்தக் கொங்கு நாட்டைப் பற்றி வானளாவப் புகழ்ந்ததை நினைத்தால் எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. ஒரு வேளை நீங்கள் புகழ்ந்த வீரம் ஓரியின் காலத்தில் இருந்ததுவோ என்னவோ?'' என்றார் மிகவும் எள்ளி நகையாடியபடியே.

''மாமன்னர் சொன்னதைப் போல் கொங்குநாடு சிறிய நாடுதான். என்றாலும் நம் படைகளைக் கண்டதும் இப்படிக் கோட்டைக் கதவுகளைத் திறந்துவிட்டுத் தம் ஆயுதங்களைக் கீழே எறிந்துவிட்டு நிற்பார்கள் என்று நான் நினைக்கவும் இல்லை. ஆனால் இதில்...ஏதோ...'' என்றார் விஜயராயர் இராஜராஜரைப் பார்த்து.

விஜயராயர் சொன்னதைக் கேட்ட இராஜராஜர் பலத்த சிரிப்புடன், ''ஏதோ என்ன இருக்கிறது? கொங்கு நாட்டவர்கள் எதிலும் யோசிக்கக்கூடியவர்கள் என்பதைக் காட்டுகிறார்கள். சோழ சாம்ராஜ்யத்தின் பெரும் படையை எதிர்த்து நிற்க முடியாது என்பது தெரிந்து பணிந்து நிற்கிறார்கள். சரி...சரி...நகருக்குள் செல்லுங்கள். அடிமைச் சாசனம் எழுதிப் பெற்றுக் கொண்டு இன்றே நம் படைகளைக் கர்நாடகத்துக்கு நடத்துவோம்'' என்றார்.

இராஜ ராஜரும் விஜயராயரும் சோழர் படையின் ஒரு சிறு பகுதியுடன் நகருக்குள் சென்றனர். இராஜராஜரும் மற்றவர்களும் இராஜபுரத்து வீதிகளில் சென்ற பொழுது மக்கள் ஏதோ ஊர்வலத்தைப் பார்ப்பதுபோல் அமைதியாகப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தனர். வீதியின் இருமருங்கிலும் ஆங்காங்கே நின்றிருந்த இராஜபுரத்து வீரர்களும் தங்களுடைய ஆயுதங்களைக் கீழே வைத்து விட்டு வெறுங் கையுடன் நின்றிருந்தார்கள். இவற்றையெல்லாம் பார்த்து மனத்துள் சிரித்தவாறாக இராஜராஜரும் ஏனையோரும் இராஜபுரத்து அரண்மனையை அடைந்தனர்.

இராஜபுரத்து அரண்மனை கொலு மண்டபத்தில் அரசர் சூடாமணித் தேவர் முதல், அடுத்து இருக்க வேண்டிய அனைவரும் கூடியிருந்தார்கள். குதிரையை விட்டிறங்கிய இராஜராஜரும் விஜயராயரும் மட்டும் கொலு மண்டபத்துக்குள் சென்றனர். உள்ளே வருகிற இராஜராஜரைப் பார்த்து மன்னர் சூடாமணித் தேவர் அரியாசனத்தி





விருந்தபடியே, "வரவேண்டும், வரவேண்டும்! சோழ சாம்ராஜ்யத்தின் பேரரசர், இராஜராஜ மாமன்னர் வர வேண்டும்! மாமன்னர் எங்கள் நாட்டுக்கு வருகை தந்தது குறித்து மகிழ்ச்சியடைகிறோம். ஆம்... தாங்கள் எங்கள் நாட்டு வழியாகப் படையுடன் எங்கு பயணம் செல்லுகிறீர்கள்?" என்றார். மன்னர் சூடாமணித் தேவர் இராஜராஜரை வாயலில் வரவேற்றாரே ஒழிய, அவர் அமர ஆசனம்கூடக் காட்டவில்லை. மன்னர் சூடாமணித் தேவர் நடந்து கொண்ட முறை இராஜராஜரை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. இராஜ ராஜர் பெரும் குழப்பமும் கோபமும் கொண்டார். ஏதோ உதவி நாடி வந்திருக்கும் ஏழையிடம் பெரும் செல்வந்தன் நடந்து கொள்வதைப் போல் கொங்கு நாட்டு மன்னர் சூடாமணித் தேவர் தமக்கு மரியாதை கொடுக்காமல் இருப்பது கண்டு திகைத்தார். சேர, பாண்டிய இராஜ்யங்களை வென்று கடல் கடந்தும் கோலோச்சி வரும் இராஜ இராஜர் என்ற பெயரைக் கேட்டாலே மற்றவர் தலை வணங்கி வாழ்ந்தும் தம்மிடம் எந்தத் தைரியத்தில் சூடாமணித் தேவர் இப்படி நடந்து கொள்கிறார் என்று குழம்பினார். கோபத்தால் உடலெல்லாம் நடுங்கியது இராஜராஜருக்கு.

இருந்தாலும் நிதானமாக, "சூடாமணித் தேவர் ஏதோ மயக்கத்தில் இருக்கிறார் போலும். வந்திருப்பது யார் என்று தெரியாமல் முறைகேடாக நடந்து கொள்கிறார். நான் நினைத்தால் இமைப் பொழுதில் இங்கு என்ன நடக்கும் தெரியுமா?" என்றார் இராஜ ராஜர் சூடாமணித் தேவரிடம்.

இலேசாகச் சிரித்துக் கொண்டே இராஜராஜரைப் பார்த்து, "மயக்கத்தில் இருப்பது நானல்ல. எல்லா நாடுகளையும் வென்று விட்டோம், நம்மை வெல்ல யாருமில்லை என்ற ஆணவ மயக்கத்தில் தாங்கள்தான் இருக்கிறீர்கள். முறைகேடாக நடந்து கொள்வது நாங்கள் அல்ல. காரணமின்றிப் படையெடுத்துமல்லாமல், நீங்கள் படையெடுத்து வருவதாகத் தாதோ, முன்னறிவிப்போ ஏதும் இன்றிப் படையெடுத்து வந்துவிட்டு முறையைப் பற்றிப் பேசுகிறீர்கள். மேலும் எங்கள் நாட்டில், அதுவும் எங்கள் அரண்மனையில் தாங்கள் என்ன நினைத்தாலும் இங்கு ஒன்றும் நடக்காது" என்றார் சூடாமணித் தேவர்.

இவ்வளவு துணிச்சலாக இராஜராஜரை ஒரு சாதாரணக் குடிமகனைப்போல் சபையில் நிற்க வைத்துப் பேசிய சூடாமணித் தேவரைக் கண்டு சபையினர் வியப்படைந்தாலும், இராஜ ராஜரை நினைத்து அஞ்சினர். சூடாமணித் தேவர் பேசியதிலிருந்து தாம் படையெடுத்து வருவது அவருக்கு முன்பே தெரிந்திருக்கிறது என்று அறிந்து கொங்கு நாட்டின் ஒற்றர் திறமையை மனத்தில் நினைத்து வியந்தார் இராஜராஜர்.

சூடாமணித் தேவரிடம், "மூன்று தலைமுறையாகப் படையோ, படைத் தலைவரோ இல்லாதிருக்கும் கொங்குநாடு சோழப் பெரும் படையைக் கண்டும் இவ்வளவு வீரம் பேசுவது விந்தைதான்" என்றார் இராஜராஜர் கோபத்திலும் ஏளனமாக.

"ஆம், உங்களைப்போல் நாடு பிடிப்பவர்களுக்குத்தான் படையும், – படைத் தலைவனும் தேவை. கொங்கு நாட்டு வீரம் இராஜராஜரை என்ன செய்யும் என்பது தெரியாது. நாங்கள் எக்காலத்திலும் சோழர் படையென்ன, வேறு எந்தப் படை வந்தாலும் ஒரு போதும் பயப்பட மாட்டோம்" என்றார் சூடாமணித் தேவர்.

"கோட்டைக் கதவுகளைத் திறந்துவிட்டு விட்டுப் படை உள்ளே நுழைந்தபின் வீரம்



பேசுவது பயத்தால் புலம்புவதுபோல் இருக்கிறது: முடிவாகச் சொல்கிறேன். 'சோழ நாட்டுக்கு நாங்கள் அடிமை, சோழ மாமன்னருக்கு முறையாகக் கப்பம் செலுத்துகிறோம்' என்று சாசனம் எழுதிக் கொடுத்து விடுங்கள். இல்லையென்றால் நீங்கள் என்னை அவமதித்ததற்கும் சேர்த்துத் தண்டனை அனுபவிப்பீர்கள்'' என்றார் இராஜராஜர் மிகுந்த கோபத்தோடு.

சபையில் கூடியிருந்தவர்கள் உண்மையாகவே இராஜ ராஜர் சொன்னதைக் கேட்டுப் பயந்து விட்டார்கள். ''சாசனம் எழுதிக் கொடுக்கும் வழக்கம் எங்களுக்கு இல்லை. மற்றவர்களிடமிருந்துதான் நாங்கள் அப்படி வாங்கியிருக்கிறோம்'' என்று சொன்னார் சூடாமணித் தேவர்.

சூடாமணித் தேவர் இதைச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே வேகமாகக் கொலு மண்டபத்துக்குள் நுழைந்த சூடாமணித் தேவரின் மகன் இளவரசன் அறப்பளீச்வரன் தன் தந்தையின் காதில் ஏதோ சொன்னான். அதற்குத் தலையாட்டிய சூடாமணித் தேவர் சபையைக் கலையச் சொல்லிவிட்டு, இராஜ ராஜரைத் தம் பின்வருமாறு அழைத்துவிட்டு முன்னால் அந்தப்புரம் சென்றார். இராஜராஜரை இளவரசன் வழி காட்டி அழைத்துச் சென்றான். இராஜராஜர் தம்முடன் வர முயன்ற விஜயராயரைத் தடுத்துவிட்டுத் தாம் மட்டும் இளவரசனுடன் சென்றார். மனக் குழப்பத்தில் இருந்த போதும் இளவரசனின் அழகைக் கண்டு ஒரு கணம் தம்மை மறந்தார் இராஜராஜர்.

அந்தப்புரத்தில் சூடாமணித் தேவரும் அரசி வேதநாயகியும் நின்றிருந்தனர். இளவரசருடன் வந்த இராஜராஜரை அமரச் சொல்லி ஆசனம் காட்டித் தாமும் அமர்ந்தார் சூடாமணித் தேவர். அரசி வேதநாயகியின் பார்வை ஒன்றே அங்கிருந்த இளவரசனையும் ஒன்றிரண்டு பணிப்பெண்களையும் வெளியேற்றி விட்டது. அனைவரும் வெளியேறியபின் அரசி இராஜராஜரைப் பார்த்து, ''உங்கள் படைகளைக் கண்டதும்



# ராம்தீர்த் பிரஹமி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும், பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக்கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சி யளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும், அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதி யான நித்திரையை அளிக்கிறது.

**SHRI RAMTIRTH YOGASHRAM**

**DADAR - BOMBAY-14**

## "YOGIC CLASSES"

எமது சென்னை ஆபீஸில் யோகாசன வகுப்புகள் நடத்தப்படுகின்றன

மதராஸ் பிராஞ்சு: 25, நைனியப்ப நாய்க்கன் தெரு, மதராஸ் – 3

போன்: 34258

K.S.G.14.58 TM

# க்ருஷன்

## எந்த வயதிலும் உங்களை 'இளமையோடு' இருக்கச் செய்கிறது




தினமும் க்ருஷன் சாப்பிட்டு என்றும் இளமையோடு விளங்குங்கள். க்ருஷனில் சரிசமமாகச் சேர்ந்துள்ள முக்கியமான ஆறு தாது-உப்புகள் மலச்சிக்கல், மூட்டுவலி, ஈரல் மற்றும் மூத்திரப்பைக் கோளாறுகள், பிடிப்பு வலி முதலியவை வராமல் தடுக்கின்றன.

க்ருஷன் உங்களை இளமையோடு வைத்திருப்பதன் விதம் இதுதான்: மூத்திரப் பைகளைக்கழுவுகிறது • ஈரலை நன்றாக இயங்கச் செய்கிறது • இரத்தத்தை சுத்தமாக்க உதவுகிறது • மலச்சிக்கல் அகல உதவுகிறது • ஜீரண சக்தியைப் பெருக்குகிறது • பசி யெடுக்க வைக்கிறது • மூட்டுவலிகளை அகற்றுகிறது.

**எளிய முறையில் என்றும் இளமையோடு விளங்க தினந்தோறும் ஒரு ஸ்பூன் க்ருஷன் சாப்பிடுங்கள்.**

கோட்டைக் கதவுகள் திறக்கப்பட்டதைப் பார்த்துக் கொங்கு நாட்டவர்கள் பணிந்து விட்டார்கள் என்று நீங்கள் நினைத்தீர்கள் இல்லையா ? நாங்கள் பணிந்து பயந்து அப்படி நடந்து கொள்ளவில்லை. உங்கள் படைகளை முறியடிப்பது என்பது எங்களுக்கு விளையாட்டு. எக்காலத்திலும் கொங்கு நாடு சோழ நாட்டுக்கு அடிமையல்ல என்ற உண்மையை நீங்கள் அறிய வேண்டும் என்பதால்தான் போர் செய்யாது உங்களை நகருக்குள் விட்டோம்'' என்று கூறிய படியே தன் அருகிலிருந்த பேழையிலிருந்து மிகவும் பத்திரமாக ஓர் ஓலையை எடுத்து இராஜராஜரின் முன்னால் வைத்தாள். அந்த ஓலையை எடுத்துப் படித்துப் பார்த்த இராஜராஜர் ஒருகணம் நிலைகுலைந்தவராக, ''நான் இதை நம்பவே மாட்டேன்'' என்று பலத்த குரலில் சொல்லிக் கொண்டு எழுந்து நின்றார்.

''ஆம், நம்பத்தான் மாட்டீர்கள். ஏனென்றால், கொங்கு நாடு படையற்ற நாடு. அதிலும் மூன்று தலைமுறையாக இந்த நிலை நிலவி வருகிறது. சோழ மாமன்னர் உலாவும் பூங்காவின் பரப்புக்கூட இருக்காது என்று எங்கள் நாட்டைப் பற்றிப் பேசிய நீங்கள் எப்படி இதை நம்புவீர்கள்?'' என்று கேட்டாள் இராஜராஜரிடம் அரசி.

இராஜராஜரின் மனத்தில் பல்வேறு எண்ணங்கள் சுழன்றன. பல களங்களில் பெரும் அரசர்களின் புறமுதுகைப் பார்த்த இராஜராஜர், ''என்னுடைய ஐயம் சரியாகத் தீரும்வரை இதைப் பற்றி ஒன்றும் வெளியிடாதீர்கள். ஆம், ஏன் இவ்வளவு காலம் இந்தச் சாசனத்தைப் பற்றி மறைத்து வைத்திருந்தீர்கள்?'' என்று மெல்லிய குரலில் கேட்டார்.

அரசி வேதநாயகி சிரித்தபடியே, ''ஐயம் தீரும்வரை என்ன, தேவை ஏற்பட்டாலொழிய இதைப் பற்றி ஒரு போதும் பறைசாற்றமாட்டோம். இந்தச் சாசனத்தை எழுதிக் கொடுத்தவரின் வேண்டுகோளுக்காகத்தான் இதை ஒருவரும் அறியாதபடி இத்துணைக் காலம் மறைத்து வைத்திருக்கிறோம். இச்சாசனம் பற்றி ஊரறிந்தால் சாம்ராஜ்யாதிபதியாகிய உங்களுக்கு அவமானம் என்று நீங்கள் நினைப்பதைப் போலத்தான் சாசனம் எழுதிக் கொடுத்த அவரும் சாசனத்தைப் பற்றி வெளி உலகுக்கு அறிவிக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். அதனால்தான் சாசனத்தைப் பற்றிச் சபையில் கூறாது தடுத்துத் தனிமையில் உங்களிடம் கூறினேன்'' என்றாள்.

இராஜராஜரால் இதை நம்பவும் முடியவில்லை; நம்பாமலும் இருக்க முடியவில்லை. ''நான் சொல்கிறேன். இச்சாசனம் உண்மையல்ல எனத் தெரிந்தால்...'' என்று இழுத்தார் அரசி வேதநாயகியையும் அரசர் சூடாமணித் தேவரையும் பார்த்து.

அதுவரையில் வாளாவிருந்த சூடாமணித் தேவர், ''தடையொன்றும் இல்லை! உங்கள் மனம்போல் நடந்து கொள்ளலாம். சென்று வாருங்கள்'' என்றார். இராஜராஜர் வெளியேறினார்.

வேகமாக அரண்மனை வாயிலை அடைந்த இராஜராஜர் குதிரை ஏறிக் காற்றெனக் கோட்டைக்கு வெளியே சென்றார். இராஜராஜர் ஏதும் சொல்லாது போவதைப் பார்த்துக் கொண்டிருந்த தளபதி விஜயராயரும் மற்ற சோழப் படையினரும் அவரைப் பின் தொடர்ந்தனர். தம் படையினருள் இருவரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு மற்றவர்களிடம், ''நீங்கள் அனைவரும் விஜயராயருடன் தஞ்சாவூருக்குத் திரும்புங்கள்'' என்று கட்டளையிட்டுவிட்டு அவ்விரு வீரர்கள் பின் தொடர மகேந்திரமங்கலம் நோக்கித் தம் குதிரையைச் செலுத்தினார் இராஜராஜர்.

அரசர் செல்வதைப் பார்த்துக் கொண்டே வந்த தளபதி விஜயராயர் அரசரின் கட்டளையை அறிந்து ஒன்றும் புரியாமல் திகைத்தார். அரண்மனையில் என்ன நடந்திருக்கும்? இராஜராஜர் எங்கே செல்கிறார்? என்னுடைய தூண்டுதலின் பேரில் அல்லவா இங்கு படை நடத்தி வந்தார்? நான் நினைத்தபடியும் நடக்கவில்லை! இதனால் தமக்கு ஏதாவது தீங்கு நேருமோ? இப்படிப் பயந்தவராக அரசரின் கட்டளைப்படிப் படைகளைத் தஞ்சாவூரை நோக்கிச் செலுத்தினார்.

காவிரிக் கரையிலேயே அமைந்து, சோழ நாட்டின் இயற்கை எழில் நிறைந்து கொழிக்கும் சிற்றூர் மகேந்திரமங்கலம். அதை அடைந்த இராஜராஜர் ஊரை அடுத்த தென்னந் தோப்பு சூழ்ந்த ஒரு மாளிகையை அடைந்தார். குதிரையை விட்டிறங்கி வேகமாக மாளிகையின் உள்ளே சென்றார். ஏதோ ஏடுகளைப் புரட்டிக் கொண்டு தரையில் அமர்ந்திருந்தார் அப்புராயர். அப்புராயர் இராஜராஜரின் தந்தை மாமன்னர் சுந்தரசோழரின் மெய்க்காவலர்களில் முதன்மையானவர். இராஜராஜர் பிறந்த நாளிலிருந்து அவரை எடுத்து வளர்த்தவர். சோழ தளபதி விஜயராயரின் தந்தையுமாவார் அப்புராயர். தம் தந்தை சுந்தர சோழரின் காலத்தில் நடந்த யாவும் அப்புராயருக்குத் தெரிந்திருக்கும். அவரிடத்தில்

## 'மினி'யிலும் மினி!



அகஸ்தியர் கங்கையைக் கமண்டலத்துக்குள் அடக்கினார் என்பது புராணம்!

ஆனால் இன்றோ ?

ஆறாயிரம் பக்கங்களை ஒரு சதுர அங்குலத்துக்கும் குறைவான பரப்புக்குள் அடக்க முடியும்! உண்மை!

ஆறாயிரம் பக்கங்களை உடைய ஒரு கலைக் களஞ்சியத்தை ஒரு தபால் தலையைவிடக் குறைவான -- அதாவது ஒரு சதுர அங்குலத்துக்கும் குறைவான பரப்புள்ள மைக்ரோ பிலிமில் படம் எடுத்துள்ளனர், ''கோடாக்'' பிலிம் கம்பெனியார். இதற்கான சாதனங்களை இவர்கள் தயாரித்துள்ளனர்.

2 மி. மீட்டர் உயரமுள்ள ஓர் எழுத்து இந்த மைக்ரோ பிலிமில் படம் எடுக்கப்படும் போது 0.000832 மி. மீட்டர் உயரமுள்ள கண்ணுக்குத் தெரியாத ஒரு நுண்ணிய புள்ளி போன்று படமாகிறது.

-- பி. வி. ஜி









சாசனத்தைப் பற்றிய முழு விவரமும் கிடைக்கும் என்றுதான் அப்புராயரைத் தேடி வந்தார் இராஜராஜர். அவரின் அருகில் சென்ற இராஜராஜர் பாசத்தினாலும், பெரியவர் என்ற பக்தியினாலும் அப்புராயரை வணங்கினார். தம்மை வணங்குவது யார் என்று நிமிர்ந்து பார்த்த அப்புராயர், வந்திருப்பது இராஜராஜர் என்பதை அறிந்து மரியாதையாக எழுந்து நின்றார். அந்தத் தள்ளாத வயதிலும் அவர் எழுந்த வேகத்தைப் பார்த்த இராஜராஜர் அவரை அணைத்துக் கொண்டார். அளவிலா இராஜ பக்தியும், அரசர்மேல் அன்பும் கொண்ட அப்புராயர், ''ஏது, இராஜராஜர் இவ்வளவு தொலை?'' எனக் கேட்டார். அப்புராயர் தம்மை இராஜராஜா என்று ஒருமையில் அழைப்பதைத்தான் பெரிதும் விரும்புவார் மன்னர். ஆயினும் அப்படி அழைக்காமல் இராஜராஜர் என்று அப்புராயர் அழைத்ததைத் தடுத்து ஏதும் சொல்லாமல், ''இல்லை, கொங்குநாட்டிலிருந்து வருகிறேன். தங்களிடம் ஒன்று கேட்க வேண்டும்'' என்றார்.

''என்ன! கொங்குநாட்டிலிருந்தா வருகிறீர்கள்! சரி, வாருங்கள்!'' என்று இராஜராஜரின் கையைப் பிடித்து அமர்த்தி அவரும் அமர்ந்து கொண்டு, ''அங்கு எதற்குச் சென்றிருந்தீர்கள்? என் மகன் ஏதாவது உங்களைத் தூண்டி விட்டானா?'' என்று கேட்டார்.

தளபதி விஜயராயர் இராஜராஜரைத் தூண்டி விடவில்லை என்றாலும் சேர பாண்டிய நாடுகளில்; சோழரால் அருகில் இருக்கும் சிறு நாடாகிய கொங்கு நாட்டை வெல்ல முடியவில்லை என்று பேசிக் கொள்வதாகக் கூறியது அவர்தான். அதனால் கர்நாடகத்தின் மீது படையெடுக்கும்போது வழியில் கொங்கு நாட்டைப் பிடிக்கலாம் என்று யோசனை கூறியது விஜயராயர்தான். அது எப்படி அப்புராயருக்குத் தெரிந்தது என்று நினைத்தார் இராஜராஜர். கர்நாடகப் பகுதிகளை வெற்றி கொள்ளப் படையுடன் செல்லும் வழியில், வெகு காலமாக எவருக்கும் பணிந்திராத கொங்கு நாட்டின் மீது படையெடுத்ததையும், அங்கு நடந்தவற்றையும் அப்புராயரிடம் தெரிவித்தார் இராஜராஜர்.

''அப்புராயரே! தன் மனைவியோடு சீதனமாகக் கிடைத்த ஓரியின் நாட்டை ஆளும் சூடாமணித் தேவன் என்னைச் சபையில் நிற்க வைத்துப் பேசினான். ஓரியின் மகள் வேதநாயகியோ ஓர் ஓலையைக் காட்டி என்னை அயர வைத்து விட்டாள். அந்தச் சாசனம் உண்மையானதுதானா? நீங்கள்தான் சொல்ல வேண்டும்'' என்று கேட்டார்.

'' விளக்கமாகவே சொல்லுகிறேன், கேளுங்கள் அரசே! கடையேழு வள்ளல்களில் ஒருவரான ஓரி வீரத்திலும், ஒழுக்கத்திலும், பக்தியிலும், நீதியிலும் நிகரற்றவர். வடக்கே சேர்வராயன் மலையும், தெற்கே கபிலர் மலையும், கிழக்கே கொல்லி மலையும், மேற்கே சங்ககிரியும் எல்லையாகக் கொண்ட பரப்பையாண்டார் ஓரி. பெரும்பாலும் மலை நாடு என்பதாலோ என்னவோ தேர்ப் படை, யானைப் படையென்று பெரும் படைகளை வைத்துக் கொள்ளாமல் வில் வித்தை

## கடிதங்களை சீக்கிரமே தபால் பெட்டியில் போடுங்கள்

தபால் நிலையங்களில்
கடைசி நிமிடத்தில் நிறைய
எண்ணிக்கையில் கடிதங்கள்
வந்து குவிகின்றன. இதனால்
சங்கடமும் தாமதமும் ஏற்படுகிறது.

கடிதத்தை சீக்கிரமே தபாலில்
சேர்த்தால், அது அன்றைய
தினமே அனுப்பி வைக்கப்படும்;
விலாசத்தாரருக்குத் தாமதமின்றி
போய்ச் சேரும்.

கடிதத்தை இப்போதே தபாலில் சேர்ப்பியுங்கள்.
மாலைவரை காத்திருக்க வேண்டுமா?

இந்திய தபால்-தந்தி இலாகா



யில் சிறந்த குதிரைப் படை மட்டுமே வைத்திருந்தார். இப்போதும் விற்படைதான் கொங்கு நாட்டில் சிறந்திருக்கிறது. ஓரி வில் வித்தையில் அருச்சுனனுக்கு நிகராகப் பேசப்படுவார். வில்லில் ஓரி என்றே அவருக்குப் பெயர் வழங்குகிறது. அவருடைய ஒரே மகள்தான் வேதநாயகி'' என்று சொல்லிக் கொண்டே வந்தார் அப்புராயர். இதெல்லாம் தெரிந்ததுதானே? கேட்டதற்குத் தகுந்த பதில் சொல்லாமல் இதைப் பற்றி விவரிப்பானேன் என நினைத்தார் இராஜராஜர். ஆனால் அதை மறுத்து ஒன்றும் சொல்லத் தோன்றாமல் அப்புராயர் சொல்வதைக் கேட்டார். ''ஆண் சந்ததியில்லாததால் தன் மகளை அரச குடும்பத்தைச் சேர்ந்த தன் உறவினன் சூடாமணித் தேவருக்கு மணம் முடித்து அவருக்கே முடிசூட்டினார் ஓரி'' என்று சொல்லிய அப்புராயர், ''ஆமாம், நான் ஏதேதோ சொல்லிக் கொண்டிருக்கிறேன் இல்லையா?'' என்றார்.

மனத்தில் அவசரப்பட்டாலும், ''இருக்கட்டும். சொல்லுங்கள்'' என அப்புராயரைத் தூண்டினார் இராஜராஜர்.

''சிறந்த வைபக்தரான ஓரி தன் தலைநகர் இராஜபுரத்திலும் காடடர்ந்த கொல்லி மலையிலும் சிவன் கோயில் கட்டி முடித்துக் குடமுழுக்கு விழாவுக்கு ஏற்பாடு செய்து எல்லா அரசர்களுக்கும் ஓலை அனுப்பினார். வள்ளல், வீரத்தில் சிறந்தவர் என்றெல்லாம் ஓரியின் புகழ் அண்டை நாடுகளில் பரவி இருந்ததைக் கேட்டு 'ஒரு சிற்றரசனுக்கு இத்துணைப் புகழா?' என்று சிறிது மனத்தில் பகை நினைத்தார் சுந்தர சோழர். விஜயநகரம் வரை தன் குடைக் கீழ் அடக்கிச் சேர பாண்டிய அரசர்களையும் அடிபணியச் செய்த

# போய்விடு!

என்றும் போல் புலர்ந்ததே பொழுது
இன்றும் அமைதியுடனே!
தோன்றினன் செங்கதிரோன்
கூரை மீது பகலைத் துவக்கி
யாரே அறிவர் இரையைத் தேடி
பாய்ந்து பறந்திடும் பருந்துகள் என...
கனவோ?...... நோக்கிடுவீர் ஞாயிறை!
உம்மிடம் உண்டு உயிரை உறிஞ்சும் டாங்கிகள்
எம்மிடம் உண்டு உயிரைக் காக்கும் உண்மை
எம்மை உயர்த்த உழைத்திடும் இந்நாளில்
உம்மிடம் உள்ளதோ உங்களின் வன்மை
எம்மை உதைத்திட, வதைத்திட
நான் பாடுகிறேன் ஒரே பாட்டு
நான் பாடும் அந்தப் பாடல்
'போய் விடு! போய் விடு!!'

— எம். எஸ். வி.

[சென்ற ஆண்டு 'செக்' நாட்டின் மீது ரஷ்யப்படை திடீரென்று தாக்கியது. அது பற்றி ஆங்கிலத்தில் வெளியான ஒரு கவிதையின் தமிழாக்கம்.]



## பிரெஞ்சிலே கொஞ்ச !

தெளிவு, ஐயப்பாடின்மை, பொருத்தமான சொற்கள் ஆகிய இயல்புகள் பெற்றிருப்பதால், நுண்ணிய கருத்துக்களைக் கூற விழைவோர்க்கும் பிரெஞ்சு மொழி சாலச் சிறந்ததொரு கருவியாக இருந்து வருகிறது.

பிரெஞ்சின் பிறிதொரு சிறப்பு அதன் இனிமையான ஒலியாகும். ''உன்னுடைய நாயை விரட்ட ஆங்கிலத்தில் பேசு; மனைவியோடு கொஞ்சி விளையாடப் பிரெஞ்சில் பேசு'' என்பது ஒரு பழமொழி.

உச்சரிப்புக்கும் எழுத்துக்கும் ஓர் உறவும் இல்லாத மொழி பிரெஞ்சு. சான்று: மார்செய்ல்ஸ் என்று எழுதுவதை மார்சே என்று சொல்ல வேண்டும். இதனால் பேசுவது போலப் பிரெஞ்சுச் சொற்களை எழுதினால் இப்போது 140 பக்கம் உள்ள ஒரு நூலை 100 பக்கத்தில் அச்சிட்டு விடலாம் !

ஆதாரம்: ''உலக நாடுகள்''
பி. வி. கிரி

---

சுந்தர சோழர் தம்முடைய எல்லையை அடுத்திருக்கும் கொங்கு நாட்டை அடிமை கொள்ள நினைத்திருந்த சமயம் அது. சுந்தர சோழருக்கும் அழைப்பு வந்தது. குறுநில மன்னர் கோயில் எழுப்பிக் கும்பாபிஷேகம் செய்ய மாமன்னராகிய என்னை நேரில் வந்து அழைக்காது ஓலை அனுப்புவதா என்று பகை மேலோங்கியவராக ஓரியின் மீது படையெடுத்து விட்டார். பேரரசர் சுந்தர சோழருடன் நானும் சென்றிருந்தேன். எங்கள் படை இராஜபுரத்தை அடைந்தபோது அங்கு ஓரி இல்லை. இராஜபுரத்து கைலாசநாதர் ஆலய விழா முடிந்து கொல்லிமலை அறப்பளீசுவரர் ஆலயக் குடமுழுக்குச் செய்ய மக்களுடன் சென்றிருந்தார் ஓரி. சுந்தர சோழர் படைகளைக் கொல்லி மலைக்கே நடத்திச் சென்றார். எங்கள் படை கொல்லி மலை அடிவாரத்தை அடைவதற்குள் இராஜபுரத்து வீரர்கள் காற்றெனச் சென்று சோழர் படையெடுத்ததைச் சொல்லியிருக்க வேண்டும் ஓரியிடம். ஆலய விழாவில் அமர்க்களம் இல்லாது மற்றவர்கள் அறியாதபடி ஓரி தம் விற்படையுடன் எங்களைப் பாதி வழியிலேயே எதிர்கொண்டார். சோழர் பெரும் படையின் முழுத் திறமையைக் காட்டியும் ஓரியின் விற்படையின் சிறு பகுதிக்கு இணை நிற்க முடியவில்லை. இரண்டு நாழிகை நேரத்தில் எங்கள் படையைப் பின்னடையச் செய்து மாமன்னர் சுந்தரச் சோழரைச் சிறு துன்பமுமின்றிப் படையுடன் சூழ்ந்தார் ஓரி. சாதாரணமாக ஓரியை எவராலும் வெல்ல முடியாது என்று மனத்தில் முடிவு செய்து தம் தோல்வியை ஒப்புக்கொண்டவராக ஏதும் பேசாமல் நின்றார் சுந்தர சோழர். அவரிடம், ஓரி ''இராஜபுரத்திலேயே தங்களுடைய வருகைக்காக நான் ஆவலுடன் காத்திருந்தேன். நான் அங்கு இல்லாது இருந்தபோதும் விடாது இங்கு தேடி வந்ததற்காக பெருமகிழ்ச்சி அடைகிறேன். இந்தச் சிற்றரசனின் அழைப்புக்கு இணங்கிப் பெரும் பரிவாரங்களுடன் வந்ததை ஒரு நாளும் மறக்க முடியாது'' என்றார் இயல்பாக.

''ஒரு சாம்ராஜ்ய சக்கரவர்த்தியை வென்று விட்டோம் என்ற எண்ணம் சிறிதும் இன்றி ஓரி தம்மிடம் நடந்து கொண்ட விதத்தை எண்ணி வெட்கினார் சுந்தர சோழர். ''வாருங்கள் ! கொல்லி மலையில் கோயில் கொள்ளவிருக்கும் அறப்பளீசுவரரின் குடமுழுக்கு விழாவைக் கண்டு பின் பேசலாம்'' என்று அழைத்தார் ஓரி. ஓரியின் அழைப்புக்கு இணங்கிப் பகை மறந்து சுந்தர சோழரோடு நாங்களும் விழாவைக் கண்டு களித்தோம். ஓரியின் அன்புக்குக் கட்டுப்பட்டுச் சுந்தர சோழர் பத்து தினங்கள் அவருடன் கொல்லிமலை அறப்பளீசுவரன் ஆலயத்தில் தங்கினார். விழா முடிந்து இராஜபுரத்து மக்கள் ஊர் திரும்பி விட்டனர். சுந்தர சோழரின் கட்டளைப்படி நம் சோழர் படையும் தலைநகர் திரும்பியது. மன்னருடன் நான்தான் இருந்தேன். தம் படைகளை ஊர் திரும்பக் கட்டளையிட்டுவிட்டு, ஓரியிடம் தோற்றதை எவரும் வெளியிடக் கூடாது என்றும் கட்டளையிட்டார். பின்னர் ஓரியிடமும், ''பல நாடுகளை வெற்றி கண்ட நான் உங்களிடம் பின்னடைந்தேன் என்ற செய்தியறிந்தால் எல்லோரும் நகைப்பார்கள்'' என்று சொல்லி ''நடந்ததை நீங்கள் மனத்திலேயே வைத்துக் கொள்ள வேண்டும்'' என்றும் கேட்டுக் கொண்டார் சுந்தரசோழர். அப்படியே ஆகட்டும் என உறுதியும் கூறினார் ஓரி. சுந்தர சோழரையும் என்னையும் ஓரியே உடன் அழைத்துச் சென்று கொல்லிமலையில் சந்தன மரங்கள் நிறைந்த காடுகளையும், காண்போர் மனத்தில் பதியும் வெள்ளிக் குழம்பென வீழும் உயர்ந்த நீர்வீழ்ச்சியையும் காட்டி மகிழ்வித்தார். ஊர் திரும்ப நினைத்த சுந்தர சோழர் ஓரி எவ்வளவு தடுத்தும் கேளாமல் ஓர் ஓலை எழுதிக் கொடுத்தார். ஓரி அதைப் பெற்று தம் அருகிலிருந்த மகள் வேதநாயகியிடம் கொடுத்தார். அப்போது அரசி வேதநாயகி சிறுமி. அந்த ஓலைதான் நீங்கள் பார்த்த சாசனம். 'நான் ஓரியிடம் தோற்று விட்டேன். சோழ நாடு எக்காலத்திலும் கொங்கு நாட்டின் மீது படையெடுக்காது' என்று சாசனத்தில் கண்டிருக்கும்!''— இப்படிச் சொல்லி முடித்தார் அப்புராயர்.

''அப்புராயரே! தங்கள் மகன் விஜயராயர் என்னைக் கொங்கு நாட்டின் மீது படையெடுக்கத் தூண்டிவிட்டது தங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டார் இராஜராஜர்.

''அதுவா ! ஓரியின் பேரன் இளவரசன் அறப்பளீசுவரனுக்கு என் பேத்தியை மணம் முடிக்க விஜயராயன் முயன்று வேதநாயகியின் விருப்பம் இல்லாமையால் திருமணம் தடைப்பட்டு விட்டது. அதனால் மனத்தில் கோபம் கொண்டிருந்த என் மகன்தான் உங்களைத் தூண்டியிருப்பான் என எண்ணினேன்'' என்றார் அப்புராயர்.

''விஜயராயர் ஆசை கொண்டதில் தவறில்லை. இளவரசனைப் பார்த்த நானே அவன் அழகைக் கண்டு ஒரு கணம் திகைத்தேனே! மாவீரன் ஓரியின் பேரனுக்கு விஜயராயரின் மகளை மணம் முடித்து அவரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும்'' என்று மனத்தில் நினைத்தவராகக் கோபமும் பகையும் மறந்து நிம்மதிப் பெருமூச்சு விட்டார் இராஜ ராஜர்.

சந்தன மண்டலத்துள்
அந்தரங்க வரவேற்பு !

தூய சந்தனத்தின்
**புது** மணங் கமழ்
# மகாராணி




**மகாராணி** : பேரசி போன்ற மென்மை யரூகுற உங்கள் மேனியைப் பேணும் சோப்

லின்டாஸ்-MHR. 4.140 TM — இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தயாரிப்பு.

# படித்துப் பாருங்கள்

## ஜஸ்டிஸ் கட்சி பொன்விழா மலர்

ஜஸ்டிஸ் கட்சியினர் பொன் விழாக் கொண்டாடி ஓர் அருமையான மலரும் வெளியிட்டிருக்கிறார்கள். ஜஸ்டிஸ் கட்சியின் ஆரம்ப நாட்களிலிருந்து அதன் தோற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் அரும் பாடு பட்டு அது மகோன்னத நிலையை அடைந்தபோது மந்திரி பதவி ஏற்று நிர்வாகமும் நடத்திய திரு பி. டி. ராஜன் அவர்கள் ஒரு சிறந்த கட்டுரை எழுதியிருக்கிறார். ஜஸ்டிஸ் கட்சி தோன்றிய நாளிலிருந்து தொடங்கிப் பல விவரங்களை அந்தக் கட்டுரை கூறுகிறது.

மற்றொரு கட்டுரையில் அக்கட்சியின் முக்கியமான பிரமுகர்களைப் பற்றித் தமது நினைவிலிருந்து பல ருசிகரமான தகவல்களைத் தருகிறார் திரு பி. டி. ராஜன். பழைய பரம்பரையினரில் அந்தக் கட்சியின் பெயரைச் சொல்லிக் கொண்டு இன்றும் நம்மிடையே இருப்பவர் பி. டி. ராஜன் ஒருவர்தான்.

ஜஸ்டிஸ் கட்சியின் பொதுச் செயலாளரான கே. பரமசிவம் அவர்களும் மிக விளக்கமான கட்டுரை எழுதியிருக்கிறார்.

இரட்டையாட்சி முறை அமுலுக்கு வந்தபோது, சென்னை ராஜதானியில் பதவி ஏற்ற ஜஸ்டிஸ் கட்சி நல்ல நிர்வாகத்தை அளித்தது.

ஜஸ்டிஸ் கட்சியினர் பதவியிலிருந்த காலத்தில் பல சீர்திருத்தங்கள் செய்தார்கள். அதில் முக்கியமானது கோவில்களையும் அறநிலையங்களையும் தக்கபடி சீர்திருத்தி நிர்வாகம் நடைபெற வகை செய்ய வேண்டும் என்பதற்காக அறநிலையப் பாதுகாப்பு போர்டு தொடங்கத் திட்டமிடப்பட்டதுதான். அது எப்படி அமைய வேண்டும், விதிமுறைகள் எப்படிச் செய்ய வேண்டும் என்பதற்கு நீதிபதி சதாசிவய்யர் அவர்களை நியமித்தனர்.

ஜஸ்டிஸ் கட்சியின் நோக்கத்தைச் சரியாக மக்கள் புரிந்து கொள்ளாததால் அவர்களுக்கு அந்த நாட்களில் பிரிட்டிஷாரின் அடிவருடிகள் என்ற பொல்லாப் பெயரும் உண்டு. காந்தீயத்தைப் பின்பற்றிப் பெரும் இயக்கம் நடத்திச் சுதந்திரம் பெறும் முறை அவர்களுக்குச் சரியானதாகத் தோன்றவில்லை. சட்ட சபைக்குள் புகுந்து வாதப் பிரதிவாதங்கள் பிரிட்டிஷாருடன் நடத்தி, சுதந்திரம் கோரிப் பெற வேண்டும் என்று கருதினர். காந்திய சத்தியாக்கிரகப் போராட்டம் வெள்ளமாகப் பெருக்கெடுத்தபோது இவர்களுடைய குரல் எடுபடவில்லை.

ஆந்திரமும் தமிழகமும், மலபார் பகுதியும் சேர்ந்திருந்த பழைய சென்னை ராஜதானியில் மிகுந்த செல்வாக்குடன் விளங்கிய ஒரு கட்சியைப் பற்றி – அக்கட்சியினர் அந்த நாள் சட்ட சபைகளில் எவ்வளவு உயர்தரமான முறையில் விவாதங்கள் நிகழ்த்தினர் என்பதைப் பற்றி இன்றைய தலைமுறையினர் தெரிந்து கொள்ள இப்புத்தகம் பெரிதும் உதவும்.

ஏராளமான படங்களுடனும் ஆங்கில, தமிழ்க் கட்டுரைகளுடனும் மலர் மிகவும் பயனுள்ள ஒரு வெளியீடாக மலர்ந்திருக்கிறது.

கிடைக்குமிடம் : கே. பரமசிவம், பொதுக் காரியதரிசி, ஜஸ்டிஸ் கட்சி, 1, பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை–5.

## கால வெள்ளம்

"திருவரங்கத்தில் கிடந்த வண்ணக் கோலம் கொண்ட ரங்கநாதப் பெருமாளுக்கும், அவ்வூரில் அவருக்கு அடுத்தபடியாகப் பிரசித்தி பெற்ற பச்சைக்கல் பத்மநாபாச்சாருக்கும் உள்ள பொருத்தம் என்னவென்றால், இருவரும் நீலமேனியர்... பச்சைக்கல் பத்மநாபாச்சார் பிரசித்தமானதற்குக் காரணங்கள் இரண்டு. ஒன்று அவருடைய அளவிறந்த செல்வம்; இரண்டு, அவருடைய முன்கோபம்."

இந்த ஆரம்ப வரிகளே நாவல் களைகட்டிவிட்டதென்பதை நன்கு உணர்த்தும்.

பச்சைக்கல் பத்மநாபாச்சார், அவர் மனைவி அலமேலு, அவர் பிள்ளைகள் உப்பிலி, கோபாலன், சாரங்கன் ஆகியவர்கள்தான் அவர் குடும்ப அங்கத்தினர்கள்; அவருக்குப் பெண் குழந்தை இல்லாத குறையைப் போக்கிக் கொள்ள அவர் செல்லத்தை இரண்டாந் தாரமாக மணந்து கொள்கிறார். பெண் குழந்தை பிறக்கிறது. ஆனால் இரண்டாவது மனைவிக்கல்ல; முதல் மனைவி அலமேலுவுக்குத்தான்! பிறகு எத்தனை குழப்பங்கள் பிறக்கின்றன என்பதை அறிந்து கொள்ள நாவல் முழுவதையும் படித்துப் பார்க்க வேண்டும்.

இருநூற்று ஐம்பத்தாறு பக்கங்கள் கொண்ட இந்நாவல் பெயருக்கேற்ப ஆரம்பம் முதல் கடைசிவரையில் பெருவெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடுகிறது. இந்நாவலின் பாத்திரங்களெல்லாம் முழுமை வடிவம் பெற்றவை. ஒவ்வொரு பாத்திரமும் ஒவ்வொரு குணத்தைப் பிரதிபலித்துக் கதையின் முடிவைச் சுவையாக்குமாறு அமைக்கப்பட்டிருப்பது பாராட்டுக்குரியது. எந்த வித மனக்கசப்பையும் ஏற்படுத்தாமல், சீர்திருத்தச் சொற்பொழிவு எதுவும் செய்யாமல், நம் பழைமையான கோட்பாடுகளைக் காலத்தின் மாறுபாட்டைக் கொண்டே மாற்ற முயன்றிருப்பது வாசகர்களைச் சிந்திக்க வைக்கும். சாதாரணக் குடும்பக் கதையான "கால வெள்ளம்" காலத்தை எதிர்த்து நிற்கும்.

எழுதியவர்: இந்திரா பார்த்தசாரதி; பிரசுரம்: தமிழ்ப் புத்தகாலயம், 576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை–5; விலை: ரூபாய் ஐந்து.




# காந்திஜி ஆடிய கிரிக்கெட்!

கே. வி. கோபாலரத்தினம்

**வெ**ற்றி பெற்றதால் அறிவை இழக்காதவரும் தோல்வி கண்டதால் மனச்சோர்வு அடையாதவருமே உண்மையான விளையாட்டு வீரர். மகாத்மா காந்தியின் வாழ்க்கை இதற்கு ஒரு சிறந்த உதாரணமாகத் திகழ்கிறது. வெற்றி இவரைத் தேடி வந்த போது, இவர் பெருந்தன்மையின் உறைவிடமாகக் காணப்பட்டார். சுதந்திரப் போராட்டத்தின் முடிவில் உலக வரலாறு காணாத அதிசயமாக மாபெரும் வெற்றியைப் பெற்ற நேரத்திலும், இவர் மிகுந்த பெருந்தன்மையுடன் நடந்து கொண்டார். சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலாக ஒரு பிரிட்டிஷ்காரரே இருக்க (மவுண்ட்பேட்டன் பிரபு) இவர் சம்மதம் அளித்தது இதற்குச் சான்றாகும்.

அரசியலில் இவர் 'கிரிக்கெட் ஆடியது' (பெருந்தன்மையுடனும் நேர்மையுடனும் நடந்து கொண்டது) ஒருபுறமிருக்க கிரிக்கெட் ஆட்டத்தில் காந்திஜிக்கு எந்த அளவுக்கு ஈடுபாடு இருந்தது ?

சத்தியசோதனை என்ற சுயசரிதையில் அவரே கூறுகிறார் :

''அப்பொழுது டோராப்ஜி எடுல்ஜி கிமி பள்ளித் தலைமை ஆசிரியராக இருந்தார். மேல் வகுப்பு மாணவர்களுக்கு உடல் பயிற்சியையும், கிரிக்கெட் ஆட்டத்தையும் கட்டாயமாக இவர் வைத்திருந்தார். என்னைக் கட்டாயப்படுத்துவதற்கு முன்பு கிரிக்கெட்டிலோ, கால்பந்தாட்டத்திலோ அல்லது உடல் பயிற்சியிலோ நான் பங்கு கொள்ளாமல் இருந்தேன்.''

கிரிக்கெட் ஆடத் தொடங்கிய இவர் படிப்படியாக அதில் தன்னம்பிக்கை பெற்று, ஆர்வத்துடன் ஆடலானார். ''காந்திஜி கிரிக்கெட் ரசிகராக மட்டும் விளங்கவில்லை; நல்லதொரு கிரிக்கெட் ஆட்டக்காரராகவும் இருந்தார்'' என இவருடன் ராஜ்கோட், ஆல்பிரட் உயர்நிலைப் பள்ளியில் படித்த திரு ரதிலால் கெளபாய் மேத்தா கூறியுள்ளார்.

''காந்திஜி ஒரு சிறந்த கிரிக்கெட் ஆட்டக்காரர் என்பதையும், கிரிக்கெட்டில் இவர் ஆர்வமுடன் ஈடுபட்டிருந்தார் என்பதையும் அநேகர் அறிய மாட்டார்கள். நானும் இவரும் சேர்ந்து பல தடவைகள் கிரிக்கெட் ஆடியிருக்கிறோம். பந்து வீசுவதிலும், பாட்டிங் செய்வதிலும் இவர் சிறந்து விளங்கியது என் நினைவில் உள்ளது. ஆனால், பள்ளியில் நடைபெற்ற உடற்பயிற்சிகளில் சேர மட்டும் இவருக்குப் பிடிக்காது. இதைத் தம்முடைய சுய சரிதையிலேயே இவர் கூறியிருக்கிறார்.

''ஒரு சமயம் நானும் இவரும் ஒரு கிரிக்கெட் பந்தயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தோம். ராஜ்கோட் நகர கோஷ்டிக்கும் ராஜ்கோட் சர்தார் கோஷ்டிக்கும் இடையே மும்முரமாக ஆட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஆட்டத்தின் உச்ச கட்டம். அப்பொழுது ஒரு குறிப்பிட்ட ஆட்டக்காரர் ஆட்டம் இழக்கப் போகிறார் எனத் திடீரென்று காந்திஜி கூறினார். அடுத்த வினாடியே அந்த ஆட்டக்காரர் ஆட்டமிழந்து விட்டார்.''

இவ்விதமாக ரதிலால் கெளபாய்



மேத்தா காந்திஜியின் இளமை நாட்களைப் பற்றி எழுதுகையில் கூறுகிறார்.

ஒரு சமயம் நம் நாட்டில் சுற்றுப் பயணம் செய்த இங்கிலாந்து கோஷ்டியினர் காந்திஜியின் 'ஆட்டோகிராப்' கேட்டனர். காந்திஜி தம்மிடம் தரப்பட்ட புத்தகத்தின் ஏடுகளைப் புரட்டிக் கொண்டே வந்து, எம். சி. சி. கோஷ்டியின் பதினேழாவது ஆட்டக்காரராகத் தம்முடைய பெயரைப் பட்டியலில் சேர்த்தார்! 1933–34ல் டி. ஆர். ஜார்டைன் தலைமையில் இங்கிலாந்து கோஷ்டி இந்நாட்டுக்கு வந்தபோது இந்தச் சம்பவம் நடைபெற்றது. இந்த விவரத்தைப் புகழ்மிக்க ஆட்டக்காரர் விஜய் மார்ச்சண்டின் தங்கை குமாரி லட்சுமி மார்ச்சண்ட் தந்துள்ளார்.

இந்த அரிய பொக்கிஷத்தை உலகக் கிரிக்கெட்டின் தலைமையகம் எனக் கருதப்படும் லார்ட்ஸில் போற்றிப் பாதுகாத்து வருகின்றனர்.

அரசியலில் மிகப் பெரிய மனிதர்களை எதிர்த்தது போலவே கிரிக்கெட்டிலும் காந்தி பெரும் புள்ளி ஒருவரை எதிர்க்க அஞ்சவில்லை! ஒரு சமயம் காலஞ்சென்ற பட்டோடி நவாபைத் தம்முடன் கிரிக்கெட் ஆடும்படி இவர் சவால் விட்டார். இதற்கு நவாப் வேடிக்கையாகப் பதில் அளித்தார்: ''மகாத்மாஜி! கிரிக்கெட்டில் நீங்கள் என்னைத் தோற்கடிப்பது நிச்சயம்; ஆனால் அரசியலில் நான் உங்களை ஜயிக்கவே முடியாது.'' இதைக் கேட்ட மகாத்மாஜி, பொக்கைவாய்ச் சிரிப்பை உதிர்த்து, ''நவாப் சாஹப்! கிரிக்கெட் ஆடாமலேயே நீங்கள் என்னை 'கிளீன் பௌல்டு' (ஆட்டமிழக்க) செய்து விட்டீர்களே!'' என்றார்.

யாருக்கும் அடிபணியாத ராமபிரான் சதுரங்க ஆட்டத்தில் சீதையிடம் தோல்வியுற்றார் என்பதைத் தியாகய்யர் பாடியுள்ளார். சிவபெருமான் சொக்கட்டான் ஆட்டத்தில் பார்வதியிடம் சகலத்தையும் தோற்ற கதையைப் புராணம் நமக்குச் சொல்கிறது.

கடவுளின் நிலையில் நாம் வைத்துப் போற்றும் அண்ணல் காந்தியும் இதே போல் அன்னை கஸ்தூரிபாயிடம் தோற்றிருப்பாரோ ஏதேனும் ஓர் ஆட்டத்தில்!

பூனா, ஆகாகான் மாளிகையில் நடைபெற்ற ஒரு வேடிக்கை ஆட்டம் பற்றி முருல்பாய் கலார்தி என்பவர் தம்முடைய புத்தகத்தில் கூறியுள்ளார்:

''ஒரு சமயம் கஸ்தூரிபாவும் பாபுஜியும் டேபிள் டென்னிஸ் ஆடினர். பாபுஜி அடித்த பந்தை கஸ்தூரிபா திருப்பி அனுப்பத் திணறியபோது நாங்கள் யாவரும் வாய் விட்டே சிரித்து விட்டோம்.''

பாட்மின்டன் ஆட்டத்திலும் காந்திஜிக்கு ஆசை இருந்தது. சரோஜினி நாயுடு குருவாக இருந்து காந்திஜிக்கு இந்த ஆட்டத்தைச் சொல்லிக் கொடுத்தார். முதன் முதலாக இருவரும் பாட்மின்டன் ஆடத் தொடங்கிய போது ஒரு ரசமான சம்பவம் நடைபெற்றது. தம்முடைய வலது கையில் காயத்துக்குக் கட்டுப் போட்டிருந்தபடியால், இடது கையில் மட்டையை எடுத்து சரோஜினி நாயுடு ஆட ஆரம்பித்தார். இதைப் பார்த்த காந்திஜியும் இடக் கரத்தால் மட்டையைப் பற்றினார்.

''நீங்கள் எதற்காக இடதுகையில் மட்டையை வைத்திருக்கிறீர்கள்?'' என சரோஜினி நாயுடு புன்முறுவலுடன் கேட்டார்.

''உங்களைப் போலத்தானே நானும் மட்டையைப் பிடித்திருக்கிறேன்!'' என்றார்.

''என்னுடைய வலது கையில் காயம் பட்டிருக்கிறது; உங்கள் வலது கைதான் நன்றாக உள்ளதே!''

''விளையாட்டில் பெண்ணை ஆண் எதிர்க்கும்போது இடது கையால் ஆடுவதுதானே வீரத்துக்குரிய தர்மம்?'' என காந்திஜி ஒரு போடு போட்டார்!

சீட்டுக் கட்டுகூட காந்தி அடிகளுக்கு ஒரு சமயம் கைகொடுத்து உதவியிருக்கிறது. 1929ம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஹைதராபாத் கூட்டமொன்றில் காந்திஜி சீட்டுக் கட்டு ஒன்றைத் தருவித்து, அதிலிருந்து ராஜா, ராணி, ஜாக், ஏஸ் முதலிய சீட்டுக்களை மட்டும் கையில் எடுத்துக் கொண்டார். ''ஜாக்கை ராணி வென்று விடுமா?'' என்றும், ''ராணியை ராஜா வென்று விடுமா?'' என்றும் கூட்டத்தினரை இவர் கேட்க, 'ஆமாம்', 'ஆமாம்' என்ற பதில் வந்தது. பிறகு ஏஸையும் ராஜாவையும் காண்பித்து, இரண்டில் எது வெற்றி பெறும் எனக் கேட்டார். 'ஏஸ்' என்று மக்கள் கத்தினர்.

காந்திஜி புன்முறுவல் பூத்து, ''மக்களிடையே ஒற்றுமை இருக்குமானால் அவர்கள் 'ஏஸ்'ஸாகி விடுவார்கள். ராஜா ராணியின் ஆட்சியை முறியடித்து அடிமைத் தளையிலிருந்து விடுபடலாம்'' எனக் கூறினார்.

தமிழாக்கம்: **வி. கோவிந்தசாமி**



















அவர் முகத்தில் மலரும் மனநிறைவைப் பாருங்கள், க்ருகோவும், மோனேகோவும் இந்தியாவிலேயே உச்ச விற்பனை யாவதற்குக் காரணமான இலட்சக்கணக்கான பேர்களில் இவர் ஒருவர்.

# பார்லே பிஸ்கெட்

வாங்குக இன்றே. பார்லே நன்றே !





நம்மில் ஒருவருக்கும் பிடித்தமான ஒரு குண விசேஷத்தைப் பெற்-றவை **க்ருகோவும், மொனேகோவும்.** ...சுவை, மணம், காரசாரம், சிக்கனம் —யாவுமே இவற்றுள் அடக்கம்! ஆகவேதான் இந்த பிஸ்கெட்கள் தம் வகைகளுள் உச்ச விற்பனை யைப் பெற்றுள்ளன. இவற்றைத்தொடர்ந்து முன்னேறு பவை: **ஜெ:ஃப்ஸ, ஓர்லே, ஸ்பின்–ஹெரச் சீஸ்லிங்ஸ்** —இந்தியாவின் முதன்மையான உப்பு பிஸ்கெட்டுகள். 30—ஆண்டு நிபுணத்துவத்தைப் பின் பலமாகக் கொண்ட, பாரதத்தின் மிக நவீனமான தொழிற்கூடத்-தில் உருவாகின்றன இவை யாவும். சுவைத்து சுகம் பெற ஒன்றல்ல...பல உண்டு!







# GRASIM

## STAPLE FIBRE A SUPPLEMENT TO COTTON AND OTHER FIBRES



**Among Indian technological achievements Gwalior Rayon's success in producing Rayon Grade Pulp from indigenous raw materials without any foreign aid or collaboration has, perhaps, been the most remarkable.** The staple fibre produced from the pulp has been a boon to the hard-pressed textile industry which was deprived of valuable raw materials when vast areas of cotton-growing land were lost to Pakistan as a result of Partition.

Grasim Staple Fibre is unique in many respects, and is, in effect, a supplement to all natural fibres including cotton, wool, silk, jute, as well as to synthetic fibres. When blended or mixed with other fibres, it increases the usefulness of the resultant fabrics, making them cooler, softer, and more comfortable while at the same time helping to lower costs.

Today Gwalior Rayon contributes substantially to the national economy. It keeps hundreds of textile mills busy, gives employment to thousands of people, helps clothe lakhs more, saves crores of rupees in foreign exchange, contributes handsomely and in ever-increasing amounts to the national exchequer—these are just a few of the calculable benefits.

Besides Rayon Grade Pulp and Staple Fibre, Gwalior Rayon also produces high quality fabrics and fabricates its own machinery and equipment.

As the needs of the nation for the basic necessities of life are constantly growing, Gwalior Rayon, conscious of its responsibilities, has already made plans to expand its production. It is the constant endeavour of the Company to serve the country to its utmost ability.

**THE GWALIOR RAYON SILK MANUFACTURING (WVG.) CO. LTD.**

Birlagram, Nagda.



சாதாரண தபால் பெட்டிதான். ஆனால் சென்னை ஹைகோர்ட் வாயிலுக்கு அருகில் இருக்கும் இதற்கும், இதர தபால் பெட்டிகளுக்கும் ஒரு வித்தியாசம் உண்டு. இதன் மீது இப்படிப்பட்ட ஒரு வேண்டுகோள் எழுதப்பட்டிருக்கிறது:

''சார்! என்மேல் சுண்ணாம்பு தடவாதே!''

மூன்று புறங்களிலும் இப்படி எழுதப்பட்டிருக்கிறது. — என். வி. ஆர். சுவாமி




பிரான்ஸ் நாட்டிலுள்ள நான்டேஸ் என்ற நகரத்தில் பெண்களுக்காக ஒரு பாங்க் திறக்கப்பட்டிருக்கிறது. பெண்கள் மட்டுமே அங்கு கணக்கு வைத்துக் கொள்ளலாம். நாரீமணிகளைக் கவருவதற்காகப் பாங்கி நிர்வாகிகள் ஒரு தந்திரம் செய்திருக்கிறார்கள். அங்கு பெண்கள் உட்கார்ந்து விரும்பும்போல் அரட்டை அடிப்பதற்காக ஓர் அழகான அறை இருக்கிறது. சிற்றுண்டி சாப்பிடுவதற்கும் சொகுசான ஓர் அறை இருக்கிறது. பாங்கிக் கட்டடத்தின் பெரும் பகுதியை இந்த இரண்டு அறைகளுமே ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன. பாங்கின் அலுவல்கள் கட்டடத்தின் ஒரு மூலையில் நடக்கின்றன. ஆதாரம்: பேட்ரு

தகவல்: ஸரோஜா ராமச்சந்திரன்




மகாகவி பாரதியார் நண்பர்களுடன் ஒரு நாள் புதுச்சேரி வீதியில் சென்று கொண்டிருந்த போது, சிறுவன் ஒருவன் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு, 'இளமையில் கல், இளமையில் கல்' என்று மனப்பாடம் செய்து கொண்டிருந்தான்.

'முதுமையில் மண், முதுமையில் மண்' என்று சிரித்துக் கொண்டே நண்பர்களிடம் கூறிக் கொண்டு நடந்தாராம் பாரதியார்.

இளமையில் கல்லானால், முதுமையில் மண்ணாக வேண்டியதுதானே?

தகவல்: பி. வி. கிரி

ஆதாரம்: ''சுவாரசிய விருந்து''



**'லவ்'!**

''லவ்'' என்ற ஆங்கில வார்த்தையின் உண்மையான அர்த்தத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் டென்னிஸ் கோர்ட்டுக்குப் போக வேண்டும். ஏனெனில், அங்கேதான் 'லவ்' என்ற வார்த்தை 'ஒன்றுமேயில்லை' என்ற அர்த்தத்தில் உபயோகிக்கப்படுகிறது!

- ஸரோஜா ராமச்சந்திரன்

## அசட்டையின் காரணம்!

புதிதாகப் படையில் சேர்ந்தவர்களுக்கு அணிவகுப்பு அதிகாரி துப்பாக்கியைப் பற்றி விரிவாகச் சொல்லிக்கொண்டிருந்தபோது ஒருவன் கவனிக்காமல் அசட்டையாக இருந்தான். அதிகாரியால் பொறுக்க முடியவில்லை. அவனை வரவழைத்து, ''இங்கே வந்து சேருவதற்கு முன்பு எங்கே வேலை செய்து கொண்டிருந்தாய்?'' என்று அதட்டிக் கேட்டார்.

''துப்பாக்கித் தொழிற்சாலையில்'' என்றான் அவன்.

('' தர்மபுத் ''இலிருந்து மொழிபெயர்த்து அனுப்பியவர் ''பதஞ்சலி'')





# மக்களுக்கு உணர்ச்சி தேவை

கோவை. மணிசேகரன்

திறந்துவிட்ட சாளரங்களின் வழியாகச் சந்தனத் தென்றல் நுழைந்து, இதமான சங்கீதத்துக்குச் சுருதி சேர்ந்தாற்போல், டாக்டர் மகாதேவனின் இனிய சிந்தனைக்கு முத்தங்களை வழங்கிக் கொண்டிருந்தது. அவருடைய சிந்தனையில் பலவிதமான ஆராய்ச்சி ரேகைகள், வளையமிட்டுச் சங்கிலியாகப் பிணைந்து நீண்டு கொண்டிருந்தன. மூளையைப் பற்றிய ஆராய்ச்சிதான். கடந்த கால - நிகழ்ச்சிகளைக் கொண்டு வந்து நிறுத்தும் அரிய 'டெலிவிஷனு'க அமைந்த இந்த மூளை, வருங்காலத்தைக் காணக்கூடிய ஓர் அற்புதக் கண்ணாடியாக ஏன் அமையக் கூடாது? அதன் 'செல்'களின் பரிணாமத் தத்துவத்தை நன்கு புரியக்கூடிய தெளிவான உருப் பொருள் கிடைத்துவிடுமேயானால், 'எலக்ட்ரானிக் பிரைனை'யே உண்டு பண்ணி விடலாமே!

"குட் ஈவினிங் மகாதேவன்!"

அருமை நண்பரும், பொறியியல் வல்லுநருமான அனந்தராமன் வந்து கொண்டிருந்தார். நண்பரைக் கண்டதும் இன்முகம் காட்டி வரவேற்று அமரச் செய்தார் டாக்டர் மகாதேவன்.

கடிகாரம் ஒன்பது முறை ஓசை எழுப்பியது. இரவின் நட்சத்திர அழகில் ஆராய்ச்சியைப் பதிய விட்டுக் கொண்டிருந்த நண்பரைக் கண்டதும், தம் வருகையால் அது தடைப்பட்டு விட்டதோ என்று அஞ்சினார் அனந்தராமன். அறிவின்கால் அறிவறியும்!

"நான் உங்களுக்குத் தொல்லை கொடுத்து விட்டேனா?" என்று தெளிவான ஆங்கிலத்தில் கேட்டார் அனந்தராமன்.

டாக்டர் மகாதேவன் பொருளார்ந்த புன்சிரிப்புடன் கூறினார். "அதெல்லாம் ஒன்றுமில்லை. வழக்கம்போல் மூளை பற்றிய சிந்தனைதான்."

பெருமிதமாகச் சிரித்தார் அனந்தராமன். "மகாதேவா! நீயும் நானும் சிறு வயதிலிருந்தே ஒன்றாகப் படித்து முன்னேறியவர்கள். டாக்டர் துறையில் நீயும், இன்ஜினீயரிங் துறையில் நானுமாக உலகப் புகழ் பெற வேண்டும் என்ற முயற்சி வெற்றி பெற நாட்கள் அதிக தூரமில்லை. பெரும்பாலும் என்னுடைய ஆராய்ச்சி விரைவில் முடிந்துவிடும் என்று நினைக்கிறேன். நீயும் அப்படி முயன்று கண்டுபிடித்து விடுவாயேயானால் நமக்கு மட்டுமல்ல, நம்மை ஈன்ற இந்த இந்திய மண்ணுக்குப் பெருமை தருவதாகும்."

நண்பருடைய ஆழ்ந்த தாய்நாட்டுப் பற்றைக் கண்டு மேலும் பூரித்தார் டாக்டர் மகாதேவன். ஆமாம்; அனந்தராமன் எம். இ., ஒரு சிறந்த பொறி இயல் மேதை. புகழ் வாய்ந்த வானொலி தயாரிப்பு நிலையம் ஒன்றில் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் வருமானத்தில் பணியாற்றி வருபவர். 'எலக்ட்ரானிக்' பற்றியதில் தேர்ச்சி பெற்ற முதல் வகுப்புப் பட்டதாரி. அவருடைய கண்டு பிடிப்பும் ஓர் அபூர்வத் தன்மை வாய்ந்ததென்றால் வியப்பதற்கில்லை.

நண்பர்கள் இருவரும் தத்தம் ஆராய்ச்சி நுட்பங்களைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர். அப்போது வெளி வாசலில் "ஐயா!" என்ற குரல் நீளமாக ஒலித்தது.

"யாரது?" — டாக்டர் மகாதேவன் குரல் விடுத்தார். அதற்குள் பின் வாசலில், கொட்டமடித்துக் கொண்டிருந்த நர்ஸ்களில் ஒருத்தி ஓடோடி வந்தாள். விவரத்தைக் கேட்டுக் கொண்டு டாக்டரின் அறையுள் நுழைந்தாள்.

"ஒரு பேஷன்ட், டாக்டர்! மூளைக் கோளாறு."

"ஓ... அப்படியா! இதோ வந்துவிட்டேன்" என்று கூறிய மகாதேவன், "அவசரமில்லையே, அனந்தராமன்?" என்றார். அனந்தராமன் முறுவலித்த முகத்துடன், 'இல்லை' என்பது போலத் தலையசைத்தார்.

மின் விசிறி மெல்லச் சுழன்று கொண்டிருந்தது.

படுக்கையில் ஏழைமையே உருவான பெண்ணொருத்தி கிடத்தப்பட்டிருந்தாள். அவளுடைய நிலை மிகவும் ஆபத்துக்குரியதாக இருந்தது. அருகே அவளுடைய கணவன், அழுத கண்ணீரும், தொழுத கையுமாக நின்று கொண்டிருந்தான்.

''டாக்டர்! நாங்கள் ஏழை, டாக்டர். வீட்டு வேலை செய்கிற வீட்டில் மாடிப் படியிலிருந்து உருண்டு விழுந்து விட்டாள். மூளை கலங்கி விட்டதென்று எங்கள் தெருக் கோடியிலிருந்த டாக்டர் சொன்னார். ஆஸ்பத்திரிக்குப் போகப் பயந்து உங்கள் விலாசத்தை விசாரித்துக் கொண்டு வந்தேன். காப்பாற்றுங்கள், டாக்டர் !''

டாக்டர் மகாதேவன் அந்தப் பெண்ணைப் பரிசோதித்துப் பார்த்தார். உண்மையில் கவலைக்கு இடமான கேஸ்தான்.

''பணம் இருக்கிறதாப்பா ?'' டாக்டர் கேட்டார். அவன் சொன்னான்: ''உங்கள் அளவுக்கு என்னால் பணம் தர முடியாது டாக்டர். நான் ஏழை. சட்டைப் பையில் இரண்டு ரூபாய் இருக்கிறது.''

அவனுடைய அந்த அழுகை, நண்பர்கள் இருவரையும் கரைத்து விட்டது. டாக்டர் சொன்னார்: ''எனக்கு நீ பணம் தர வேண்டியதில்லை அப்பா ! இப்போது உடனடியாக ஊசி போட்டாக வேண்டும். அதற்குப் பத்து ரூபாய் செலவாகும். பிறகு இவளுக்கு வேண்டிய மருந்து வாங்க வேண்டும். மொத்தத்தில் இப்போதைக்குப் பதினைந்து ரூபாய் தேவைப்படுகிறது.''

'கோ' வென்று அழுது விட்டான் அந்த ஏழைக் கொத்தன். சாயந்தரம்தான் ஒருவரிடம் ' பதினைந்து ரூபாய் கைமாத்தாக வாங்கி, லாட்டரிச் சீட்டு மோகத்தில் மூன்று சீட்டுக்களை வாங்கி விட்டான். இது என்ன பதினைந்து ரூபாய்க்கு மூன்று சீட்டுக்கள் என்கிறீர்களா? ஒரு மாநிலம் போட்டா போட்டியில் ஒரு கோடி ரூபாய் லாட்டரிச் சீட்டுத் திட்டத்தை வெளியிட்டு ஒரு சீட்டின் விலை ஐந்து ரூபாய் போட்டிருந்தது. அதிர்ஷ்டம் அடித்தால் ஒரு கோடி. அடிக்கட்டுமே என்ற ஆசை — இல்லை இல்லை, பேராசை போதும்! அந்த ஏழை அன்றுடம் காய்ச்சிக்கு! எத்துணை மடமையான ஆசை இது? இப்போது மனைவியே பலியாகப் போகிறாளே !

அந்தக் கொத்தன், மாலை நடந்து கொண்ட மடத்தனத்தை டாக்டரிடம் வெட்கமில்லாமல் வெளிப்படுத்தி, சட்டைப் பையிலிருந்த சீட்டுக்களைக் காட்டினான். இவற்றை எடுத்துக் கொண்டு டாக்டராவது பதினைந்து ரூபாய் கொடுக்க மாட்டாரா என்பது அந்த ஏழை நெஞ்சத்தின் எதிர்பார்ப்பு. 'பரிசென்ன வேண்டிக் கிடக்கிறது? பவித்திரமான மனையாள் பிழைத்தால் போதும்' என்கிற ஞானோதயம் அவனுக்குப் பிறந்து விட்டது.

பரிசுச் சீட்டுக்களைப் பார்த்ததும், உடனடியாக, அனந்தராமன் தம் பையிலிருந்து பதினைந்து ரூபாயை எடுத்துக் கொடுத்து விட்டார். அவருடைய அந்தச் செய்கை டாக்டர் மகாதேவனுக்கு ஆச்சரியத்தை விளைவித்து விட்டது. அனந்தராமனுக்கென்ன பைத்தியமா பிடித்து விட்டது! ஒன்றையும் அப்போது பேசிக் கொள்ளவில்லை.

அனந்தராமன் கொடுத்த பதினைந்து ரூபாய் மருந்தாக மாறியது. ஏழையின் மனைவி ஓரளவு தேர்ச்சி கண்டாள். கொத்தனும் டாக்டரையும், பரிசுச் சீட்டுக்கு ஆபத்பாந்தவனாக நின்று பணம் தந்த அனந்தராமனையும் வணங்கி விடைபெற்றுச் சென்றான்.

கைகளைக் கழுவித் துடைத்துக் கொண்ட டாக்டர் மகாதேவன், வெகு நேரம் வரையில் பேசாமலிருந்தார். பிறகு என்ன நினைத்துக் கொண்டாரோ, ''அனந்தராமா ! அந்தச் சீட்டுக்களை இப்படிக் கொடு !'' என்று கூறியவராய், மேசை அறையைத் திறந்து பதினைந்து ரூபாயை எடுத்து நீட்டினார்.

அனந்தராமனுக்கு ஒன்றும் புரியவில்லை. ''மகாதேவா ! எனக்கு இந்த மாநிலத்தின் லாட்டரிச் சீட்டு வாங்க வேண்டும் என்ற ஆசை இருந்தது. இப்படி எதிர்பாராதவிதமாக அது கிடைத்து விடவே, அதிர்ஷ்டம் தேடி வருகிறது என்கிற ஆசையில் வாங்கி விட்டேன். நீ எதற்காகக் கேட்கிறாய் ?''



டாக்டர் மகாதேவன் புன்முறுவல்பூத்தார்.

''ஏன் சிரிக்கிறாய், மகாதேவா! உனக்கும் இந்த ஆசை உண்டா? உனக்கு வந்த அதிர்ஷ்டத்தை நான் பறித்துக் கொண்டேனே என்று நினைக்கிறாயா?''

மீண்டும் அதே புன்முறுவல் டாக்டர் மகாதேவன் முகத்தில் அரும்பியது. ''இவ்வளவு நாட்கள் என்னோடு பழகி, நீ என்னைப் புரிந்து கொண்டது இவ்வளவு தானா அனந்தராமா? அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை வைக்கும் மனிதன், புகழால் முன்னேற்றமடைய முடியாது. முயற்சியில் நம்பிக்கை வை!''

அனந்தராமன் அரண்டு போனார். ''நீ என்ன சொல்லுகிறாய், மகாதேவா! இந்தச் சீட்டுக்களுக்கு அதிர்ஷ்டம் வருமானால் நான் கோடீசுவரன்!''

''அனந்தராமா! நீ தாய்நாட்டுப் பற்றுள்ளவன். இந்த நாட்டைக் குட்டிச்சுவராக்க இப்படியான திட்டங்களும், ஒருமைப்பாடு குலையும் பிரச்னைகளும் ஏனோ பயங்கரமாக முளைத்து வருகின்றன. ஒரு நாட்டில் சுறுசுறுப்பு வளர வேண்டும்; சோம்பேறித்தனம் வளரக் கூடாது! ஜப்பான், ருஷ்யா போன்ற நாட்டில் உணர்ச்சிகள் கொந்தளித்த போதுதான் புரட்சி ஏற்பட்டது. பிறகு நாடு சுபிட்சம் அடைந்தது. அமெரிக்கர் அதிர்ஷ்டத்தில் நம்பிக்கையில்லாமல் கடும் உழைப்பை மேற்கொண்டனர். இன்று சந்திரனை நோக்கி 'அப்பலோ'வை அனுப்புமளவுக்கு முன்னேறி விட்டனர். நம் நாட்டில் ஒன்று சுறுசுறுப்பு தேவை; இல்லையென்றால் புரட்சி தேவை என்பது என் அபிப்பிராயம்.

''இந்தச் சோம்பேறித்தனமான முயற்சிகள் தலைதூக்குமேயானால், எண்ணிவிடக்கூடிய மிகச் சிலர் லட்சாதிபதிகளாகவும் கோடீசுவரர்களாகவும் வந்து விடலாம். ஆனால் லட்சோப லட்சம், கோடானு கோடி மக்கள் எதிர்காலத்தில் கடன்காரர்களாகவும், — பிச்சைக்காரர்களாகவும் போய் விடுவர். பிறகு எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்பது போல், எல்லாரும் இந்நாட்டுப் பிச்சைக்காரர்கள் என்ற நிலை வரும். அப்போது ஏற்படப் போகும் நாட்டின் பயங்கர நிலையை இப்போது கற்பனை செய்து பார்க்கக்கூடப் பயங்கரமாக இருக்கிறது!''

டாக்டர் மகாதேவனுடைய நீண்ட பேச்சால் ஏற்பட்ட குமுறல் முகத்தைச் சிவக்க அடித்தது; வருத்தம் நெஞ்சைக் கலக்கிக் கண்ணீராக வழிந்தது.

அனந்தராமன் விதிர்விதிர்த்துப் போனார். அந்த நிலையிலும் அவர் கேட்டார்: ''மகாதேவா! எனக்கு அதிர்ஷ்டத்தால் லாட்டரிச் சீட்டு என் வருகிறதோ இல்லையோ! இதனால் என்ன வந்துவிடப் போகிறது? பணம் நிறைய இருந்தால் மேலும், ஆராய்ச்சிகளைத் தொடர வசதியாக இருக்கும் அல்லவா?''

அந்த வருத்தத்துக்கிடையிலும் கடகடவென்று சிரித்தார் டாக்டர் மகாதேவன். ''அனந்தராமன்! புதிய சிந்தனைகள் வறுமையான நெஞ்சங்களிலிருந்துதான் முக்காலும் புறப்படும். நீ கோடீசுவரனானால், பிறகு



## ''ஆயிரம் பொய் சொல்லி...!''

இரண்டு வருடங்களுக்குமுன் கருக்கொழுந்தானா பதவிக்கு' நேர்முகத் தேர்வுக்கு வரச் சொல்லிப் பாண்டிச்சேரியிலுள்ள ஜவாஹர்லால் போஸ்ட் கிராஜுவேட் மெடிகல் காலேஜிலிருந்து ஒரு தபால் வந்திருந்தது. அதன் பேரில் நான் காலை 9-10 மணிக்குப் பாண்டிச்சேரியை அடைந்தேன். நான் தேர்வுக்கு ஆஜராக வேண்டிய நேரம் காலை பத்து மணி. அவசரம் அவசரமாக அங்கிருந்து டவுன் பஸ்ஸைப் பிடித்துக் கிளம்பினேன். பஸ் கடைத் தெருவைக் கடந்தபோது ஒரு பெரிய வேட்டு வெடித்த சப்தம் கேட்டது. பஸ்ஸில் இருந்த அனைவரும் ஓர் ஆட்டம் ஆடி ஓய்ந்தோம். பஸ் டயர் வெடித்து விட்டது என்றார் கண்டக்டர். எல்லோரும் இறங்கினோம். எனக்குத் தர்மசங்கடமாகி விட்டது. நடந்தே போய் விடலாம் என்று விசாரித்துப் பார்த்தேன். இன்னும் மூன்று மைல் தூரம் இருக்கிறது. நடந்து போவதாய் இருந்தாலும் முக்கால் மணி நேரமாவது ஆகும் என்றார்கள் அங்கிருந்தவர்கள். ஒரு பர்லாங் தூரம் சென்றிருப்பேன். நீல நிற உடையணிந்த ஒருவர், சாதாரண நீல நிறக் குல்லாய் ஒன்றையும் அணிந்து கொண்டு ஒரு சைக்கிள் வண்டியில் சென்றுகொண்டிருந்தார். கைதட்டி நிறுத்தி என்னுடைய அவசரத்தை அவரிடம் விளக்கி என்னை எப்படியேனும் பத்து மணிக்குள்ளாக மருத்துவக் கல்லூரியில் சேர்க்குமாறு வேண்டினேன். அவரும் ஒப்புக்கொண்டு பின்னே உட்காரச் சொன்னார். மருத்துவக் கல்லூரிக் கட்டடங்கள் கண்ணுக்குத் தென்பட்டன. எதிரே ஒரு ஜீப் வந்து கொண்டிருந்ததை அவரும் கவனிக்கவில்லை, நானும் கவனிக்கவில்லை. ஏனென்றால், அவர் என்னைப் பற்றிய விவரங்களைக் கேட்டுக் கொண்டே வந்தார். அருகே ஜீப் நின்றது. அதிலிருந்து இரண்டு ஸப்-இன்ஸ்பெக்டர்கள் இறங்கினார்கள். என் தோழர் என்னைப் பார்த்து, ''அதோ தெரிகிறதே, அதுதான் நீங்கள் செல்ல வேண்டிய இடம். நீங்கள் காலம் தாழ்த்தாமல் சென்று கொண்டிருங்கள். எனக்கும் அங்கு ஒரு வேலை இருக்கிறது. பின்னே வருகிறேன்'' என்றார். சப்-இன்ஸ்பெக்டரில் ஒருவர் தம் கைப் புத்தகத்தில், மிதி வண்டியில் இருவர் வந்ததற்காக மிதி வண்டிச் சொந்தக்காரரின் விலாசத்தைக் குறித்துக் கொண்டிருந்தார். நான் என் வழி சென்றேன்.

மதிய உணவுக்காக வெளியே வந்த போது அந்த மிதி வண்டிக்காரர் வெளியே நின்றிருந்தார். நல்ல முறையில் தேர்வு எழுதினீர்களா என்று அன்புடன் விசாரித்தார். என்னால் அவருக்கு ஏற்பட்ட கஷ்டங்களுக்கு நன்றியையும் வருத்தத்தையும் தெரிவித்துக் கொண்டேன்.

அவர், தாம் ஒரு போலீஸ்காரர் என்றும், மருத்துவக் கல்லூரியின் சரகத்தில் தாம் வேலை பார்ப்பதாகவும் தெரிவித்தார். எனக்கு நெருப்பைத் தொட்டது போல் இருந்தது. நான் பத்து ரூபாயை எடுத்துக் கொடுத்து சப்-இன்ஸ்பெக்டர்கள் சார்ஜ் செய்ததற்காக வாங்கிக் கொள்ளுங்கள் என்றேன்.

அவர் அன்புடன் என்னைப் பார்த்து, ''நல்ல காரியத்துக்காக இது மாதிரிக் குற்றங்கள் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் தாம் என்றும் தயங்கியது கிடையாது என்றும், சாதாரண மனிதன் இந்தக் குற்றத்தைச் செய்தால் தண்டனை குறைவு, ஆனால் காவல் துறையில் வேலை செய்யும் தானே இது மாதிரி குற்றத்தைச் செய்தால் அது மிகவும் பாவம் என்றும் கூறிக் கொண்டே விடைபெற்றுச் சென்று விட்டார்.

—எஸ். ராமச்சந்திரன்

உனக்கேன் ஆராய்ச்சி? பணத்தை மேலும் மேலும் குட்டி போட ஆராய்ந்து முடிவில் வருமான வரி இலாகாவின் காலில் விழும் கீழ்த்தரமான மனிதனாகி விடுவாய்.''

வெகு நேரம் தம்மை மறந்த சிந்தனையில் ஆழ்ந்த அனந்தராமன், புறப்பட்டார்.

''முடிவு கூறாமல் புறப்படுகிறாயே, அனந்தராமா!''

''அந்த ஏழையிடமே இந்தச் சீட்டுக்களைக் கொடுத்துவிடப் போகிறேன். இது தான் என் முடிவு.''

மீண்டும் கடகட வென்று நகைத்தார் டாக்டர் மகாதேவன். ''வேண்டாம். அந்த ஏழைக்கு மனைவியின் மூலம் ஞானோதயம் பிறந்துவிட்டது. மீண்டும் அவனுடைய நல்ல உணர்வுகளை மழுங்கச் செய்து கெடுப்பது நியாயமாகாது.''

''பிறகு என்னை என்னதான் செய்யச் சொல்லுகிறாய்?''

''நீ சிந்தனையாளன். நான் சொல்ல வேண்டியதில்லை.''

அனந்தராமனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

அண்ணாந்து நோக்கினான். டாக்டரின் தனி அறையில் அம்மண்டபத்துக்கு அருகில் சின்னஞ் சிறிய தீபம் ஒளி பரப்பிக் கொண்டிருந்தது. அந்தச் சிறிய ஒளி அனந்தராமனுடைய சிந்தனையைப் பற்ற வைத்தது என்று சொல்வதா? ஒளி ஏற்றியது என்று எழுதுவதா?

அடுத்த கணமே —

கையின் சுமையாக இருந்த ஒரு கோடி ரூபாயின் லாட்டரிச் சீட்டுகள், அந்தத் தீபத்தை முத்தமிட்டு, பாவத்தை எரித்துவிடு என்று வேண்டின. ஒரு கோடி ரூபாயின் பிரதிநிதி போல் விளங்கிய அந்த லாட்டரிச் சீட்டுகள், எரிந்து கருகிச் சாம்பராகிக் கொண்டிருந்தன.

அருமை நண்பனின் அந்த நல்ல முடிவைக் கண்ட டாக்டர் மகாதேவன், ''அனந்தராமா! இந்தப் பரந்த இந்தியாவில் இந்தப் புரட்சி முடிவுடன் நாம் இருவர் மட்டும் தான் இருக்கிறோம் என்று நினைத்துவிடாதே! எத்தனை எத்தனையோபேர்கள் இருக்கிறார்கள். இருந்து என்ன பயன்? நாட்டுக்கு உழைப்பு தேவை; மக்களுக்கு உணர்ச்சி தேவை என்கிற தத்துவத்தை அர்த்தம் புரிகிறது போல் சத்தியாக்கிரகம் செய்யத்தக்க மனிதர்களும் தேவைப்படுகிறார்களே!'' என்று கூறி அமைதியாகச் சிரித்தார். அந்தச் சிரிப்பில் வெற்றிப் பெருமிதம் மட்டும்தானா எதிரொலித்தது? வேதனைச் சிறுமிதமும் எதிரொலிக்கத்தான் செய்தது!

# வட்டமேஜை

**கா**ந்திஜி விரும்பிய கீதம் என்னும் பகுதியில் ஸ்ரீ ரா. கணபதி அவர்கள் தொடர்ச்சியாக எழுதும் கட்டுரைகளைப் படித்து வருகிறேன். புராண இதிகாசங்களில் உள்ள மிக ஆழமான வேதாந்தக் கருத்துக்களைக் கற்றோருக்கும் மற்றோருக்கும் எளிதில் விளங்கும் வண்ணம் தீங்கனித் தமிழில் குழைத்துத் தருவது ஒரு வகையில் ரசவாதம் செய்வது போலாகிறது. அது அதன் ஆசிரியருக்கு மட்டுமே கைவந்த கலை. உதாரணமாக 11–5–69 கல்கி இதழில் கீதை வாசகத்தில் பிரதிபலிக்கும் 'கடமையைப் பலன் கருதாது செய்ய வேண்டும்' என்ற கருத்துக்கொப்ப சம்பவிக்கும் 'பல நிகழ்ச்சிகளையும் சுதாமா (குசேலர்) கிருஷ்ண பரமாத்மா இவர்களின் சந்திப்பு — சம்பாஷணைகள் மூலம் தருவது வாசகர்களாகிய எங்களுக்கு மகிழ்ச்சியை அளிக்கிறது. இலங்கையில் உள்ள வாசக நேயர்கள் ஏகோபித்து ஆசிரியரின் முயற்சியைப் பாராட்டுவார்கள்.

யாழ்ப்பாணம், இலங்கை.
26–5–69 — க. குருநாதன்

**த**ங்களின் 20–4–69 'கல்கி' இதழில் வட்டமேஜைப் பகுதியில் திருவண்ணாமலை அரசினர் கலைக் கல்லூரி முதல்வர் திரு டி. வி. சீனிவாசன் அவர்கள் எழுதியிருக்கிறார். மேற்படி கல்லூரி மாணவர்கள் டாக்டர்களின் உதவியோடு தடுப்பூசித் திட்டத்தைச் செயல்படுத்துவது மிகவும் பாராட்டப்பட வேண்டிய பொது நலத் தொண்டாகும். எனினும், முதல்வர் அவர்கள் அம்மை ஒழிப்புத் திட்டம் ஒன்றைத் தவிர வேறு எந்தத் திட்டத்தையும் அரசினர் இலவசமாகச் செயல்படுத்தவில்லை என்று கூறியிருப்பதை மறுக்கிறேன். அம்மை ஒழிப்புத் திட்டம், மலேரியா ஒழிப்புத் திட்டம், யாஸ் ஒழிப்புத் திட்டம், க்ஷயரோக தடுப்புத் திட்டம், யானைக்கால் வியாதி தடுப்புத் திட்டம், குட்டநோய் தடுப்புத் திட்டம் போன்ற பல திட்டங்களைப் பொது சுகாதாரத் துறையின் மூலமாக இலவசமாக அரசு செயல்படுத்தி வருகிறது. ஒவ்வொரு துறைக்கும் சுகாதாரத் துறை உதவி நெறியாளர் என்ற அந்தஸ்திலே உள்ள தனித் தகுதி பெற்ற டாக்டர்கள் பொறுப்பேற்றுள்ளார்கள்.

கக்குவான் இருமல், டெடனஸ், டிப்தீரியா ஆகிய மூன்று நோய்களுக்கும் சேர்த்துக் கொடுக்கப்படும் தடுப்பூசி கடந்த நான்கு ஆண்டு காலமாக மாநிலத்திலே உள்ள அத்தனை 'ஆரம்ப சுகாதார நிலைய'ங்களிலும் இலவசமாகப் போடப்பட்டு வருகிறது. கிராமப்புறங்களிலே உள்ள எல்லாக் குழந்தைகளும் இத்தடுப்பு ஊசி மூலம் மேற்கூறிய மூன்று வியாதிகளிலிருந்தும் காக்கப்படுகின்றனர். நகர்ப்புறங்களிலே உள்ள மருத்துவ மனைகளில் தடுப்பூசித் திட்டம் இல்லையென நினைக்கிறேன். திருவண்ணாமலை போன்ற நகர்ப் புறங்களில் இத்திட்டம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் கிராமப்புறக் குழந்தைகள் இந்த இலவசத் தடுப்பூசித் திட்டம் மூலம் வெகுவாகப் பலன் பெறுகிறார்கள்.

மொடக்குறிச்சி — சி. லோகநாதன்
13–5–69 — (ஹெல்த் இன்ஸ்பெக்டர்)

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# 'என்னை காலேஜ் கிரிக்கெட் கோஷ்டியின் காப்டனுகத் தேர்ந்தெடுத்தார்கள் !'



ஆனுல், சில மாதங்களுக்கு முன் எனக்கு ஒரே சோர்வு, பலவீனம். அதன்விளைவாக என்னை கிரிக்கெட் கோஷ்டியில் சேர்க்கவில்லை. நான் ஒரு டாக்டரைப் பார்த்தேன்.

டாக்டர் சொன்னுர் : 'படிப்புக்கும் விளையாட்டுக்கும் தேவையான அதிக சக்தியைப் பெற தினமும் நீ ஹார்லிக்ஸ் சாப்பிடு.'



ஹார்லிக்ஸ் அற்புதமாக பயனளித்தது ! என்னுடைய விறுவிறுப்பான ஆட்டத்தைக் கண்டு என்னை கோஷ்டியின் காப்டனுகவே தேர்ந்தெடுத்தார்கள். இப்பொழுது நான் தினமும் ஹார்லிக்ஸ் சாப்பிடுகிறேன்.

HL 7487

## ஹார்லிக்ஸ் உதவியால் முன்னேறினேன்

இளம் வயதினரான ஆண்களும் பெண்களும் இழக்கும் சக்திக்கு ஈடுகட்ட ஹார்லிக்ஸ் உதவுகிறது. ஹார்லிக்ஸ் சாப்பிடுவதனுல் தெம்புடன் வேலை செய்ய முடிகிறது. சோர்வு ஏற்படுவதில்லை, சிறந்த ஆரோக்கியத்துடன் இருக்க முடிகிறது. இளைஞர்களுக்கும் வயதானவர்களுக்கும் ஒரே போல் பலன் தரும் உணவு ஹார்லிக்ஸ். தினமும் ஹார்லிக்ஸ் அருந்துங்கள் !




ஆடைச் சத்து நிறைந்த பாலுடன் கோதுமை மாவு மற்றும் மால்டெட் பார்லியின் போஷாக்குச் சத்துக்கள் சேர்த்து தயாரிக்கப்பட்டது

# ஹார்லிக்ஸ் அதிக சக்தியை அளிக்கிறது !

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




கடுமை வாய்ந்த, மலிவான தேய்ப்புச் சாதனங்களை நம்பியிருக்க முடியுமா? கண்டிப்புடன் பெற்றிடுவீர் நுரைவளமோங்கும் விம். பேசின், தொட்டி, பீங்கான் பாண்டங்கள், பாத்திரங்கள், எதுவாயினும் சரி—விம் பட்ட இடமெல்லாம் ஒளிப் பிழம்பே. துப்புரவாக்குவதில் அதிக ஆற்றல் வாய்ந்த விம், விடாப்பிடியான பிசுக்குகளும் விடைகொடுக்கும். துப்புரவான இல்லங்களுக்கு அடையாளம் ஒப்பிலாத விம் ஒளி.
ஓங்கிய ஒளிபெறவே—வாங்குவீர் விம்.

**பாங்கான இல்லங்களிலே-விம், பளிச்சிடும் இல்லங்களிலே விம்**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-V.19-140 TM